



# ஆனந்த போதினி



# ANANDA BODHINI

MADRAS

Vol. 27. பொருளடக்கம். No. 10.

சித்திரபானு வரு சித்திரைமீ கஉ

உள்ளடக்கம். பக்கம்.



5





# "ஆனந்தபோதினி"

## சந்தா விவரம்

| | | |
|---|---|---|
| வருடம் 1-க்கு தபாற்கூலி உள்பட | இந்தியா, ஸிலோன் ... ... | 1—0—0 |
| | பர்மா ... ... | 1—4—0 |
| | பினங், ஸிங்கப்பூர் தென் ஆப்பிரிக்கா, பசரா, மெசபொடேமியா முதலிய வெளிநாடுகளுக்கு | 2—0—0 |
| நடந்துகொண்டிருக்கிற வருடத்திய தனிச் சஞ்சிகை விலை | | 0—2—0 |
| சென்ற வருடங்களின் தனிச் சஞ்சிகை விலை | | 0—3—0 |

ஒரு வருடத்திற்குக் குறைந்த சந்தா கிடையாது.

(1) சந்தாதாரராய்ச் சேருகிறவர்கள் பூரணமாகப் பெயரை எழுதியனுப்பவேண்டும்.

(2) சந்தாத் தொகையை முன்னுடிச் செலுத்தியாவது அல்லது வி. பி. யில் பணம் கட்டியாவது பத்திரிகை பெற்றுக்கொள்ள வேண்டும். எப்போது சேர்ந்தாலும் அவ்வருட ஆடிமாச முதல்தான் கணக்கு வைக்கப்பட்டு ஆடிமாத சஞ்சிகை முதல், பத்திரிகை அனுப்பப்படும்.

☞ (3) சஞ்சிகையை வி. பி. யில் வரவழைப்போர் ரிஜிஸ்டர் சார்ஜ் 3-அணாவோடு (18-4-1921 முதல் மணியார்டர் கமிஷன் 10-ரூபா வரையில் 2-அணா வாகையால்) அந்தக் கமிஷன் 2-அணா, வி. பி. க்குத் தபால் சார்ஜ் 0-0-6. ஆக 0-5-6-அதாவது 6-அணா சேர்த்து ரூபா 1-6-0 கட்டி வி. பி. யைப் பெறவேண்டும். மணியார்டர் அனுப்பினால் 1-2-0 மட்டுமே யாகும். ஆதலால் முன்னுடி மணியார்டர் அனுப்பிப் பத்திரிகை பெற்றுக்கொள்வதே நலம், இதைக் கவனிக்கவும்

(4) யாருக்கேனும் சஞ்சிகை சேராவிட்டால் அவர்கள் அம் மாதம் 15-ம் தேதி வரையில் பார்த்து அதற்குமேல் அதே தமிழ்மாத முடிவிற்குள் அவ்விவரத்தைத் தெரிவித்தால்தான் மறுபடி யனுப்பக்கூடும். பிறகு தெரிவிப்போர் கிரைய மனுப்பிப் பெறவேண்டும்,

(5) இடம் மாறும் சந்தாதாரர்கள் அடுத்த சஞ்சிகை தங்களுக்குப் புது விலாசத்திற்கு வந்து சேரும் வண்ணம் தபாலாபீஸோடு ஏற்பாடு செய்துகொண்டு நமக்குப் புது விலாசத்தை யறிவிக்கவேண்டும். இன்றேல் அடுத்த சஞ்சிகை பெரும்பாலும் பழைய விலாசத்திற்கே போய்விடும். அதற்கு நாம் பொறுப்பாளியல்ல.

(6) சந்தா நம்பரைக் குறிக்காமல் எழுதும் கடிதங்கள் கவனிக்கப்பட மாட்டா. அத்தகைய கடிதங்களால் நேரிடும் தவறுதல்களுக்கு நாம் பொறுப்பாளி யல்ல. பதிலை விரும்புவோர் ரிப்ளை கார்டாவது தபால் தலையாவது அனுப்பினாலன்றி விடை யளிக்கப்பட மாட்டாது.

(7) வியாசங்களை எழுதுவோர் சுத்தமாக இலக்கணப் பிழையின்றித் தங்கள் உண்மைப் பெயருடன், மத தூஷணை, பிறர் தூஷணை, துரைத்தன விரோதம் முதலியவையின்றியும், பொது ஜனங்கள் விரும்பக்கூடியனவாகவும் எழுதவேண்டும்.

| | | | |
|---|---|---|---|
| Life Subscription ஜீவிய சந்தா | இந்தியா, ஸிலோன் | ரூபா | 15—0—0 |
| | பர்மா, முதலிய வெளிநாடுகளுக்கு | ,, | 25—0—0 |

ஓம்
பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

“ எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருள்
மெய்ப்பொருள் காண்ப தறிவு.”—**திருவள்ளுவர்.**



| தொகுதி 28 | சித்திரபானு ஹூ மாசிமீ கஉ<br>1943ஹூ பிப்ரவரிமீ 13உ | பகுதி 8 |
|---|---|---|

## கடவுள் வணக்கம்.

வைச்ச பொருள் நமக்கு
ஆகும்என்று எண்ணி நமச்சிவாய
அச்சம் ஒழிந்தேன் அணிதில்லை
அம்பலத்து ஆடுகின்ற
பிச்சன் பிறப்பிலி பேர்நந்தி
உந்தியின் மேல்அசைத்த
கச்சின் அழகு கண்டால் பின்னைக்
கண்கொண்டு காண்பது என்னே !

செய்குன்ற நீல(ம்) மலர்கின்ற
தில்லைச்சிற் றம்பலவன்
மைகுன்ற ஒண்கண் மலைமகள்
கண்டு மகிழ்ந்து நிற்க,
மெய்குன்று எரியும் விளக்குஒத்த
நீலமணி மிடற்றான்
கைகுன்ற ஆடல்கண்டால் பின்னைக்
கண்கொண்டு காண்பது என்னே ! (2)

ஊனத்தை நீக்கி உலகு அறிய
என்னைஆட் கொண்டவன்
தேன்ஒத்து எனக்கு இனியான்
தில்லைச்சிற் றம்பலவன் எம்கோன்
வானத்தவர் உய்ய வன்னஞ்சை
உண்ட கண்டத்து இலங்கும்
ஏனத்துஎயிறு கண்டால் பின்னைக்
கண்கொண்டு காண்பது என்னே ! (3)



## கர்விழுங்களை அழிக்க முடியுமா?

ஒரு நாட்டின் செல்வங்களிலெல்லாம் தலை சிறந்தது கலைச் செல்வமாகும். நீர் வளம் நில வளங்களால் விளையக் கூடிய பல்வித செல்வங்களுக்கெல்லாம் மேலான செல்வம் கலைச் செல்வமாகும். ஒரு நாடு நாகரிகமுள்ள நாடு என்று கூறப்படுவதற்கு அறிகுறியாகவுள்ளது அந்நாட்டின் கலைச் செல்வமேயாகும். கலைச் செல்வம் எவ்வளவுக்கெவ்வளவு மிகுதியாக இருக்கிறதோ அவ்வளவுக் கவ்வளவு நாகரிகமும் நாட்டில் பரவியிருக்கும். நம் தமிழ்நாடு பண்டைக்காலத்தில் கலைச்செல்வம் மிகுதியாய் வாய்ந்திருந்தமையால் தான், நாகரிகம் வாய்ந்ததாயும் இருந்தது; ரோம், கிரீக், எகிப்து முதலிய பழைய நாகரிகமிக்க நாடுகளோடு ஒப்ப, தமிழ்நாடும் கலை நாகரிகங்களில் சிறந்த நாடு என்று பாராட்டப் படக்கூடிய பெருந் தகுதியுடையதாயுமிருந்தது.

ஒரு நாட்டுக்கு எத்தனையோ வகையான செல்வங்கள் இருந்தாலும், அச் செல்வத்துள் எல்லாம் செல்வமாகக் கலைச் செல்வத்தைக் குறிப்பிடுவது எதற்காகவென்றால், இச் செல்வம் அழியாத் தன்மை வாய்ந்தது; ஆதலால், அதை யுடைய நாட்டுக்கு நிரந்தரமான பெருமையையும் சிறப்பையும் ஏற்படுத்தி வருகிறது. மற்றச் செல்வங்களெல்லாம் இன்று தோன்றி நாளை அழியும் தன்மை வாய்ந்தனவாகையால், அவற்றால் ஒரு நாட்டுக்கு ஏற்படக்கூடிய பயனும் நன்மையும் அவற்றுடன் மறையும். ஆகவே, ஒரு நாட்டின் அழியாச் செல்வம்-உலகம் உள்ளளவும் பெருமை யளித்துவரும் பெருஞ் செல்வம் கலைச் செல்வமே என்பதை யாரும் ஆட்சேபிக்க முடியாது. கலைச் செல்வமென்றால் என்ன? இலக்கியம், காவியம், கவிதை, இசை, நாடகம், சிற்பம், சித்திரம் முதலிய வெல்லாம் கலைச் செல்வத்தின் பரிணாமங்களாகும். இத்தகைய கலைச் செல்வத்தை யாராயினும் அழிக்க முடியுமா என்றால் ஒருக்காலும் முடியாது என்று துணிந்து கூறலாம். கலைச் செல்வத்தை அழிப்பதாகச் சொல்வது, அக்கலையை யுடை

மையாகவுடைய நாட்டையும் அதில் வாழும் மக்களையும் அவர்களது நாகரிகத்தையும் அழிப்பதாகத்தான் பொருள் படும்.

இக் கலைச் செல்வத்தைத்தான்—கலையின் ஒரு பகுதியான காவியங்களைத்தான்—இன்று ஒரு கூட்டத்தினர் அழிக்க முற்பட்டிருக்கின்றனர். இது அவர்களால் முடியக்கூடிய காரியமா? இல்லவே இல்லை.

தாய்மொழியில் உள்ள காவியங்களை—இலக்கியங்களை ஏதோ ஒரு போலிக் காரணத்தைக் கூறிக்கொண்டு தீக்கிரையாக்கப் போவதாகக் கூறும் ஒரு பைத்தியக்கார கூட்டத்தை நம் தமிழ் நாட்டிலின்றி வேறெங்கு காண முடியும்? உலகில் நாகரிகமே புகாத காட்டுமிராண்டிகள் வாழும் இடங்களில் கூட இத்தகைய அறிவீனமான காரியத்தைச் செய்யும் மக்களைக் காண முடியாது. தமிழ்மொழியில் இசையில்லை; இசைக்குத் தகுந்த பாட்டில்லை என்று எப்படி ஒரு கூட்டம் கரைந்து வருகிறதோ, அது போல இந்த ஒரு கூட்டம் கிளம்பி யிருக்கிறது. இத்தகைய விசித்திரபுத்தியும் விநோதச் செயல்களும் தமிழ்நாட்டில் தவிர, உலகத்தில் வேறெங்கணும் காண முடியாது.

உலகத்திலுள்ள மற்ற நாட்டு மக்கள் தங்கள் கலை நாகரிகங்களை மற்றெல்லாச் செல்வங்களிலும்—ஏன்? தங்கள் உயிரினும் மேலாகப் பாவித்துப் போற்றி வருகிறார்கள். ஆனால் தமிழ் மக்கள் முன்னோர் அரும்பாடுபட்டுத் தேடி வைத்துச் சென்ற கலை நாகரிகங்களை அவற்றின் அருமை பெருமைகளை யறிந்து பேணுந் திறமை யற்றவர்களாக இருக்கிறார்கள். அது மட்டுமா? தங்கள் அறியாமையால் கலைகளைக் கொலை செய்தும் வருகின்றனர். இப்போது ஒரு சிலர், கலையின் ஒரு பகுதியான காவியங்களை ஏதோ காரணங் கூறிக் குழி தோண்டிப் புதைக்கவுந் தொடங்கி விட்டனர். இந்நிலைமையைத் தமிழ்நாட்டின் தவக்குறை என்று சொல்லாது வேறென்ன வென்பது?

கம்ப ராமாயணம், பெரிய புராணம், போன்ற நூல்களை இக் கூட்டத்தார் கொளுத்த முற்பட்டிருப்பதற்குக் கூறுங் காரணமென்ன? (1) ஆரியமத ஏடுகள். (2) திராவிடரை அடக்க, இழிவு செய்ய எழுதப்பட்டன, உதவுகின்றன. (3) ஆபாசக் கருத்துகள் கொண்டன. அநாகரிக நிகழ்ச்சிகளைக் கூறுவன, பேதம், கொடுமை முதலியவைகளைப் பக்தியின் பேரால் புகுத்துவன. (4) ஏடுகள் வெளியிடும் கருத்தை ஒட்டிய நடவடிக்கைகளைச் செய்வதால் மக்களிள் மூட நம்பிக்கை வளருகிறது, சமுதாயம் கெடுகிறது. இவ்விதம் தாங்கள் இந்நூல்கள் பற்றிக்கொண்டிருக்கும் எண்ணத்தை நாட்டினர் உணர வேண்டுமென்று விரும்பியே தீக்கிரையாக்கும் அழிவு வேலை

யைச் செய்ய முற்பட்டிருப்பதாக திரு. அண்ணாத்துரை எம். ஏ. கூறுகிறார். இக் கூற்று உண்மையா, தவறா என்ற ஆராய்ச்சியில் புக நாம் விரும்பவில்லை. ஆனால், இவர் மேற்குறித்த நூல்களைப் பற்றிக் கூறும் குறைபாடுகள் பிற நாட்டு மொழிகளிலுள்ள காவியங்களில் இல்லையா? அக் குறைபாடுகளுக்காக அந்நாட்டு மக்கள் அக் காவியங்களையெல்லாம் கொளுத்திவிட்டார்கள்? (ஹிட்லரின் நாஸி தர்பாரில்தான் தங்களுக்குப் பிடிக்காத சில புத்தகங்களைத் தீக்கிரையாக்கியதாகவும், புரொபஸர் ஐன்ஸ்டீன் போன்ற பேரறிஞர்களை நாட்டை விட்டு விரட்டியதாகவும் கேள்விப்படுகிறோம். இவை அநாகரிகச் செயல்கள் என உலக முழுவதுமே வெறுக்கிறதல்லவா?) திரு அண்ணாதுரை கல்லூரியில் படித்த ஷேக்ஸ்பியர் நாடகங்கள் முதலியவை மகா காவியங்களென உலக முழுதும் போற்றப்படுகின்றனவே; அவைகளில் எவ்வளவு ஆபாசக் கருத்துகள், அநாகரிக நிகழ்ச்சிகள், மூட நம்பிக்கைகள் நிரம்பியிருக்கின்றன; அவற்றிற்காக, அக்காவியங்களை அந்நாட்டு அறிஞர்கள் படிக்காது புறக்கணித்து விடவில்லை; மக்கள் அறிவையும் ஒழுக்கத்தையும் கெடுத்துவிடுமென்று தீக்கிரையாக்கிவிடவில்லை. அதற்குப் பதிலாக, அக் காவியங்களை அவர்கள் தங்கள் உச்சிமேல் வைத்துக் கூத்தாடுகின்றனர். அக் காவியங்களைப் பெற்றிருப்பதற்காக அவர்கள் பெருமை கொள்ளுகின்றனர். 'தங்கள் நாட்டுக்குத் தேவையான பொருள்களையெல்லாம் கற்பக தருபோல் வழங்கும் பல வளங்கள் நிறைந்த இந்தியா வேண்டுமா? ஷேக்ஸ்பியர் காவியங்கள் வேண்டுமா?' என்று கேட்டால், தங்களுக்கு ஷேக்ஸ்பியர் கவிதைகள்தான் வேண்டும் என்றன்றோ அந்நாட்டினர் கூறுகின்றனர்? இதிலிருந்து என்ன ஏற்படுகிறது? ஒவ்வொரு நாட்டிலும் அறிஞர்கள் காவியங்களையும், இலக்கியங்களையும், கவிதை யழகுக்காகவும், அவற்றில் பொதிந்துள்ள உயர் பொருள்களுக்காகவும், நீதிநெறிகளுக்காகவுமே வாசிக்கின்றனரேயன்றி, வெறுங்கதைக்காகவும், அவற்றில் உள்ள நிகழ்ச்சிகளுக்காகவும் மட்டும் படிக்கவில்லை என்பதையறியவேண்டும். அதுபோல, நம் நாட்டு மக்களும் கம்ப ராமாயணத்தையும் பெரிய புராணத்தையும் படித்து இலக்கிய இன்பத்தை நுகருவதில் என்ன தவறு இருக்கிறது? பிற நாட்டு மக்களைப் போல், நம் நாட்டு மக்கள் காவியங்களையும இதிகாசங்களையும் கவிநயத்துக்காகப் படிப்பதில்லையே! கதைக்காகவும், மதக் கொள்கைக்காகவுமே படித்து மூடநம்பிக்கையை வளர்த்து அநியாயமாகக் கெட்டொழிகிறார்கள்? என்று சொல்லிப் பரிதாபப்படுகிறார் திரு. அண்ணாத்துரை. இக் கூற்றை அப்படியே நாம் எடுத்துக்கொள்ள முடியாது. மேற்குறித்த காவியங்களை மதக் கொள்கைக்காகப் படிப்பவர் வெகு வெகு சிலரே. கவிநயத்தைக்

கருதியும் விழுமிய பொருள்களை யுத்தேசிக்கும் படிப்பவர்களே பெரும்பான்மையோராவர். மதக்கொள்கை யுடையோர்க்கு இக் காவியங்கள் அவசியமில்லை. அவர்களுக்குப் பக்தியைப் புகட்டுவதற்குத் தோத்திர நூல்களும் சாத்திர நூல்களும் எத்தனையோ இருக்கின்றன. மதவாதிகளுக்குக் கம்ப ராமாயணமோ பெரிய புராணமோ வேத புத்தகங்களல்ல. அர்த்தமற்ற மூடக்கொள்கையுடைய மதவாதிகளுக்கு நல்லறிவு புகட்டவே, கம்பர், சேக்கிழார் போன்ற கவிஞர்கள் இயற்றிய காவியங்களுக்கு விஷயமாக அடியார் சரிதை, வீரர் சரிதைகளை எடுத்துக் கொண்டனர். அக்கால நிலைக்கு—மக்கள் மனோபாவத்துக்கு அவர்கள் அவ்வித முறையையே கையாளவேண்டியதாயிற்று. அம்முறை இக்காலத்துக்குப் பொருத்தமற்றது என்று திரு. அண்ணாதுரை போன்ற 'பகுத்தறிவாளர்'கள் கருதுவார்களானால், 'அக்கவிஞர்கள் இயற்றியுள்ள காவியங்களில் வரும் கதைகள் வெறும் கற்பனைகள்; அவைகளை மனதிற் கொள்ளாது கவி நயத்தை மட்டும் நுகருங்கள்' என்று மக்களிடையே பிரசாரம் செய்யட்டும்; இது நல்லது; இது கெட்டது என்று பகுத்தறியக்கூடிய அறிவு விளக்கத்தைத் தரும் கல்வியை எல்லா மக்களுக்கும் புகட்டும் திருப்பணியில் ஈடுபடட்டும். மக்களின் அறியாமை நீங்கிவிட்டால், சமுகாயத்தைப் பிடித்துள்ள சகல கேடுகளும் ஒரு கொடியில் ஒழிந்துவிடும். இன்று மக்களுக்கு வேண்டியது, இன்றைய முக்கிய பிரச்சினையாகவுள்ளது அறிவு உணவும் (கல்வியும்), வயிற்றுணவுந்தான். அவற்றிற்கு வழி செய்வதே திரு. அண்ணாதுரை போன்ற இளைஞர் கடமையாகும். வெறும் காகிதத்தாலாய புத்தகங்களைத் தீக்கிரையாக்கிவிடுவதால், மக்களுக்கு நன்மை செய்துவிட முடியாது. அறிவு வளர்ச்சியை யுண்டுபண்ணிவிட முடியாது என்று நாம் எடுத்துக் கூற விரும்புகிறோம்.

# தமிழன் இலக்கியம்

(வித்வான்–எம். சாம்பசிவம்)



வாழ்க்கையின் வைகறைப் பொழுதிலிருந்து, மக்கள் அனுபவித்து வரும் சலன நிகழ்ச்சிகளும், மனோ தர்மங்களும் உருப்பெற்று, பல ஒன்று சேர்ந்து, ஓர் நூலாக மிளிரவரின், அது, அப்பொழுது இலக்கியம் எனப்படும். அல்லது, பல நீதிகளின் தொகுப்பு, ஓர் ஆசிரியனின் கைத்திறனால் நீண்ட கதையாகப் பரிணமித்தாலும் இலக்கியம் ஆகலாம்.

ஓர் நாட்டில் எழுந்த—எழும் இலக்கியங்கள், அந்நாட்டின் மேன்மையை வரையறுத்துக் காட்டும்; அதுமட்டுமல்ல; அந்நாட்டின் மக்களை உணர்ச்சி மிக்கவர்களாகக்கூட மாற்றும்.

இலக்கியமாக உருப்பெற்ற அனுபவங்கள், மனோதர்மங்கள், தனிப்பட்ட ஒரு மனிதனுடைய—ஆசிரியனுடையவல்ல;—பரிவர்த்தனையாக நாட்டில் மிளிர்ந்து கிடக்கும் அவ்வளவும், சிதறித் தோன்றியவை. அவை யாவும் ஒரே உள்ளத்தில் குவிந்தெழலாம். அந்நிகழ்ச்சிக்குக் கருவியாயிருப்பது, இலக்கியம்—காவியம். அவற்றின் அதிக தொடர்பினாலதான், மக்களோடு மக்களாய்க் கிடந்த அவன், குறித்து எண்ணும் ஆசிரியன் ஆனான்.

கம்பர், சேக்கிழார், சாத்தனார், இளங்கோவடிகள் முதலிய இலக்கிய ஆசிரியர்களும், இலக்கியமும், இலக்கணமுமான—நீதி நூலாய திருக்குறளின் ஆசிரியர் வள்ளுவரும் அப்படிப்பட்டவர்கள்தாம் என்பது ஆராய்ந்த தமிழனின் எண்ணம். அந்த ஒரே காரணத்தால்தான் தமிழுலகம் அவர்களின் இலக்கியங்களைச் சிரமேற்கொண்டு காக்கின்றது.

கேவலம், அன்னிய நாட்டின் பழக்க வழக்கங்களை ஒரு நாட்டில் திணிக்கவேண்டும் என்பதற்காகவோ அன்னியநாட்டு மகனொருவனைப் புகழ்ந்து, அதனால் தன் செல்வாக்கைப் பெருக்கிக்கொள்ளலாம் என்பதற்காகவோ இலக்கிய ஆசிரியன், பிறநாட்டுச் சம்பவங்களைத் தன் நாட்டு மொழியில் இலக்கியம் ஆக்கவில்லை. அவன் நோக்கமெல்லாம், தன் நாட்டில் நடவாதிருந்த—பிற நாட்டில் நடந்த ஓர் தனிப்பெரும் நிகழ்ச்சியைத் தன் நாட்டு மக்களுக்குத் தெரிவித்து, அவர்களை அனுபவ ஞானிகளாக்க வேண்டுமென்பதே ஆகும். அதே காரணம்தான், கம்பராமாயணம் போன்றவை தோன்றியதற்குஞ் சொல்லவேண்டும்.

இந்த வுண்மையை யுணராது கம்பராமாயணம், பெரியபுராணம் முதலிய சில நூல்களைக் குறித்துத் தவறான மனப்பான்மை கொண்டு, அவற்றைக் கொளுத்தப் புகுந்தனர், சு. ம. கட்சியில் ஒரு சிலர். அவர்களின் செயல், 'சீ இந்தச் சமுத்திரம், பூவுலகத்தின் பெரும்பாகத்தை அடைத்து

கொண்டிருக்கிறது; இதனால் எம்மவர்க்கு இடம் இல்லாமல் அதிக சங்கடம் ஏற்பட்டிருக்கிறது. ஆகவே இந்தச் சனியன் பிடித்த கிள்ளுக்கீரை சமுத்திரத்தை இதோ! ஒரு விரலடியில் கக்கிவிடுகிறேன்!' என்று முனைந்து தின்னும் ஓர் சிற்றெறும்பின் செயல் போலும்.

ஏனென்றால், இந்தச் சு. ம. கட்சியினர் கையில் எத்தனைப் பெரிய புராணம், கம்பராமாயணம் உள்ளனவோ அத்தனையையும் வேண்டுமானால் நெருப்பில் போட்டுக் கொளுத்தி அவர்கள் வேடிக்கை பார்க்கலாம்—அல்லது குளிர் காயலாம்! உலகத்தில் எத்தனைக் கம்பராமாயண பெரிய புராண ஏட்டுப் பிரதிகள், கண்ணாடிப் பீரோக்களிலும், தங்கப் பேழைகளிலும் கொலுவீற்றிருக்கின்றனவென்று இந்தச் சு-ம-காரர்களுக்குத் தெரியுமா? தெரிந்திருந்தால் ஏன் குன்று முட்டிய 'குருவி' ஆகின்றார்கள்?

சொல்லலாம், சு-ம-காரர்கள்: கம்பராமாயணம் ஆரியனின் கதை கூறுகிறது. அதனால், அதன்மேலுள்ள வெறுப்பை எப்படியாவது நாங்கள், காட்டவேண்டியதுதானே? என்று.

உண்மை அதுவல்ல; கம்பராமாயணமோ, பெரியபுராணமோ, எதுவாயிருந்தாலுஞ் சரி; தமிழ் மொழியில் தோன்றிய எந்த இலக்கியமும் தமிழன் இலக்கியமே. அதில் எள்ளளவும் தவறில்லை. இதைத் தனித்திருந்து ஆராய்ந்தால் புலப்படும். இதைத் தவிர்த்து, எத்தனையோ வகையில் அறியாமை நிரம்பிய வெறுப்பைக் காட்ட நினைப்பது, பேதைமை.

கம்பராமாயணத்தைப் பார்ப்போம். இராமனைத் தெய்வம் என்று புகழ்ந்தது அபத்தம்; அவன், ஓர் அரசகுமாரன்; வீரன். அப்படியே அதிலுள்ள பாத்திரங்களைத் தேவராக்கியும், மனிதராக்கியும், இராக்கதனாக்கியும், வானரங்களாக்கியும் கூறியுள்ளதுகூடப் புனைந்துரையே. ஆனால், இந்தப் புனைந்துரையையோ, அபத்தத்தையோ நேரே கம்பன் உற்பத்தி செய்துகொள்ளவில்லை. மூல கதையில் உள்ளதைத் தழுவியது கம்பன் இராமாயணம். மற்றைப்படிக் கால தேச வர்த்தமானங்களைப் பொறுத்து, வேற்றுமைப்பட்டிருந்த இந்திய மக்களே, இராமாயணப் பாத்திரங்கள்; அவ்வளவுதான்.

இந்த உண்மையை வான்மீகி, தன் கைச் சரக்கால் வர்ணம் கொடுத்து வேறு வேறாக்கினான்! அவசியத்தை முன்னிட்டுத் தழுவி எழுதச் சென்ற கம்பன் நோக்கம், 'கதையின் பாவிகம் மட்டும் நமக்குப்போதும்' என்று இருந்திருக்குமானால், அவன் இராமாயணம் அன்றே புறக்கணிக்கப் பட்டிருக்கும் மக்களால். காரணம், ஆரியர் மூலமாகத் தாம் காதால் கேட்ட கதைக்கும், கம்பராமாயணத்திற்கும் அதிக வித்தியாசம் இருந்திருக்கும். அதனால், சரியான வகையில் எழுதப்படவில்லை என்று இகழ்ந்திருப்பார்கள், மக்கள். தமிழ்க்கம்பன் புலமை—பெருமை அப்பொழுதே அழிந்துபோயிருந்தால் இன்று 'கம்பன் பிறந்த தமிழ்நாடு' என்று, தமிழர்களால் பெருமை பெற்றுக் கொள்ள முடியுமோ? ஆகவே, கம்பன் செய்ததும் யோசனையே!

அதற்காகவே கம்பன், மூல கதையை அப்படியே தமிழாக்கினான். ஆனால், கம்பராமாயாணத்தில் இன்று, படித்த-அறிவுள்ள தமிழன் காணு

வது, கேவலம் ஆரியன் கதையல்ல; பழக்கவழக்கமல்ல; பெருங்கீர்த்தியல்ல. அவன் காணுவதெல்லாம், அதில், தமிழனின் கலைத்திறம்!—இலக்கியம்! அவ்வளவுதான்!

ஆகவே, கம்பன், தன் கலைத்திறனை அப்பொழுது மக்கள் விரும்பிய ஓர் கதை மூலமாகக் காட்டினன். இப்பொழுதும், பெரும்பாலும் எந்த மக்களும், ராமாயணத்தைக் கலைத்திறனை அறியவும், இலக்கியத்தை அனுபவிக்கவும் படிக்கிறார்களே தவிர, கேவலம் பற்றுக்கோடாயமைந்த அந்தப் பாட்டிக் கதையைக் கேட்கவல்ல, படிப்பது.

தமிழ்மொழி எவ்வளவு நயமானது! இனிமையானது! பெருமையுடையது! என்பதை நன்கு அறிய ராமாயணம் ஓர் முதல் உதாரணமாகும், என்றும்! இராமாயணத்தின் ஒவ்வொரு செய்யுளும், எறக்குறைய திருக்குறளின் ஒவ்வொரு குறளுக்கும் இருக்கிற மதிப்பளவு மதிப்பு பெறத் தகுதியுண்டு. இன்று தமிழ்மொழியில் உள்ள மூல நூலாகிய உலகப் பொது நூலார் திருக்குறளுக் கடுத்தபடி ஒரு தமிழ்நூலைக் குறிப்பிட வேண்டுமென்றால், நான், கம்பராமாயணத்தைத்தான் முதலில் முழுமனதோடும் குறிப்பிடுவேன். அத்தகையது, கம்பராமாயணம்.

கம்பராமாயணத்தில் எந்தச் செய்யுள், மக்களுக்குத் துர்ப்போதனை செய்கிறது? நீதியைத் தவிர—இனிமையைத்தவிர—சாதுர்யங்களைத்தவிர தாய்மொழிப்பற்றைத் தவிர!

இன்னும், ராமாயணம், ஓர் சிறந்த தமிழ் நாடகம்! அதில் நடிக்கும் பாத்திரங்கள், கம்பனின் நெஞ்சு அறையிலே குற்றமற நடித்து வெளிவந்தவர்கள்—கம்பனின் 'டைரக்ஷ'னல் ஒளிரும் 'நக்ஷத்திரங்'கள்!

உண்மையில் இன்றுவரை கம்பன் உயிரோடு இருந்திருப்பானுனல் அவனது 'டைரக்ஷ'னில் வரக்கூடிய தமிழ்நாட்டுப் படங்கள், உலக முழுமையையும் சுற்றிக்கொண்டிருந்திருக்கும். காரணம்: அவன் ஒருவனுக்குத்தான் தெரியும், கதையில் வரும் உபமானங்களை எப்படிச் சித்திரிப்பது?—நினைவுகளை எப்படிக் காட்டுவது?—'ஸீன்'களை எப்படி அமைப்பது?—கற்பனைகளை எந்த வரம்புக்கு உட்படுத்துவது?—நடிகர்களை எப்படி உண்மையாக நடிக்கவைப்பது? என்பன போன்றவையெல்லாம்.

எனவே, கம்பராமாயணம், தமிழர்களின் முக்காலத்தின் கலைத்திறனையும் ஏககாலத்தில் நிரூபிக்கும் பெருமை வாய்ந்த தமிழ் இலக்கியம் என்பதோடு, அப்படிப்பட்ட இலக்கியம் எதிர்காலத்தில் தமிழனுக்கு மற்றும் ஓர் இலக்கியம் கிடைக்கும் என்பது நிச்சயமில்லை என்பதையும் கூறி, மேற்கூறிய காரணங்களால்—நுண்ணித்து ஆய்வார்க்கு—கம்பராமாயணமோ, பெரியபுராணமோ, தமிழில் தோன்றிய மற்றெந்த இலக்கியமோ அவை எல்லாம் 'தமிழன் இலக்கியமே' என்று முடிக்கிறேன்.

---

# வேலைக்காரி

(சாத்தன்.)



"அம்மா!"

மௌனம்.

"அம்மா!!"

அப்பொழுதும் பதிலில்லை. மழையுடன் சேர்ந்து ஓலமிடும் பேய்க் காற்றின் இரைச்சலில் மூக்கின்மீது நின்று ஊசலாடும் பெருமூச்சின் ஒலி எப்படிக் கேட்கும்! அல்லது அந்த பேயஞ்சும் கரு இருளில் உடைந்து போன கட்டிலின்மேல் சோர்ந்து கிடக்கும் சதையற்ற அப்பெண்ணின் உருவம்தான் எப்படித் தெரியும்!

"அம்மா! அம்மா!" பெரு இரைச்சலின் நடுவிலும் வீணைகானம் போன்று ஒலிக்கும் அக்குரல் தொண்டையில் நின்று ஒருவித நடுக்கத்துடன் வெளி வந்தது.

கண்கள் கெட்டுவிட்டதோவெனும்படி மின்னல் மின்ன குடிசையின் நடுவில் வங்கிக் கிடக்கும் வயதடைந்த மாதின் உருவம், வாயிலில் திறந்த கண்களுடன் நின்றுகொண்டிருக்கும் அவ் யுவதியின் பார்வையில் அப்பொழுதுதான் பட்டது. கைகளை அகல விரித்துக்கொண்டு பாய்ந்தோடிய அப் பெண்ணின் "அம்மா"வென்ற அலறல் வானமே நொறுங்கி அக் குடிசையின்மீது விழுந்துவிட்டதோ வென இடித்த இடியோசையுடன் சேர்ந்து ஒடுங்கிப் போயது.

மறுபடியும் ஒரே நிசப்தம்.

சலசலவென்று குடிசையின் மீதிருந்து வடிந்துகொண்டிருக்கும் மழைத்துளியின் ஒலியும் காற்றிரைச்சலும் தவிர, வேறு ஒருவித ஓசையுமின்றி எங்கும் அந்தகாரம் குடிகொண்டிருந்தது.

மேலே சொல்லுவதன் முன் இவ்விருவர்களின் முந்திய கதையைத் தெரிந்திருந்தால் நல்லது. அவ்வளவு நீண்டதுமல்ல.

சுமார் இருபது வருடங்களுக்கு முன் இதே குடிசையில் இதே கட்டிலில் ஓர் கிழ வேலைக்காரனின் உயிரற்ற உடல் கிடந்தது. பக்கத்தில் பன்னிரண்டு வயதுச் சிறுமி ஏங்கி ஏங்கி அழுதுகொண்டிருந்தாள். தனது தந்தை இறந்துவிட்டார் என்று அக் குழந்தையால் நம்பமுடியவில்லை. அப்பொழுது அவ்வீட்டின் யஜமானி-மிகவும் நற்குணமுடையவள்-சிறுமியைத் தேற்றி அழைத்துக்கொண்டு வெளியே போனாள்.

வருடங்கள் சென்றன. சிறுமி பதினைந்து வயதடைந்து, பருவத்திற்கேற்ற அழகும், குலத்திற்கேற்ற தேகக்கட்டும் பெற்று பொலிவுடன் விளங்கினாள். வேலைக்காரிதான்; ஆனால் அந்த நிலைமையில் அல்லது அந்த முறையில் அவள் அங்கு நடத்தப்படவில்லை.

வீட்டில் யஜமானியும் அவளது ஒரே மகனும் மட்டுமே. நிரம்ப சொத்து இருக்கிறது. பையனுக்கும் வயது 23 ஆகிறது. அப்படியொன் றும் கெட்டவனென்று பேர் எடுக்கவில்லை. ஆனல் ஆடம்பரச் செலவு கொஞ்சம் அதிகமென்று கேள்வி. அது அவர்களது இயற்கைபோலும்!

ஒரே வீடு; அதுவும் மது நிரம்பி வழியும் யௌவனப் பருவம். பையன் கோபுவின் மலர்ந்த புன்னகை வேலைக்காரப்பெண் லக்ஷ்மியின் பெரிய கண் களின் நடுவில் தாண்டவமாடும் ஆனந்தத்தில் அடிக்கடி விளையாட வாரம் பித்தது. அப்பெண் எந்த நோக்குடன் தனது யஜமானனைப் பார்த் தாளோ அல்லது எந்த எண்ணத்துடன் புன்னகை செய்தாளோ அது நிச் சயமாகச் சொல்லமுடியாது. ஆனல் அப்பையனுடைய நடையுடை பாவனைகள், அவன் கண்களில் தோன்றும் சரிந்த பார்வை, உதடுகளின் கடையில் மலர்ந்து மறையும் புன்னகை அவன் கொண்டுள்ள எண்ணத்தை சந்தேகமில்லாமல் தெளிவுபடுத்தியது.

பௌர்ணமி இரவு. கோபுவை மாடிக்குப் படுக்கப்போகும்படி யனுப்பி விட்டு வீட்டு யஜமானி தன்னுடைய அறைக்குச் சென்றாள். எப்பொழு தும்போல் லக்ஷ்மி பாத்திரங்களை கிணற்றங்கரையில் கொண்டுபோய் வைத்து துலக்கிக்கொண்டிருந்தாள்.

நிலவு பால்போல் காய்ந்தது. மரக்கிளைகளி னூடே சந்திரிகையின் சாய்ந்த கிரணங்கள், லக்ஷ்மி துலக்கி வைத்திருக்கும் வெண்கலப் பாண் டங்களின் மேல் விழுந்து, பிரகாசித்துக்கொண்டிருந்தன. அப்போது அவளது சிறிய கைவிரல்களின் நடுவில் அகப்பட்டுத் தத்தளிக்கும் பாத் திரங்களின் லாவண்யத்தை கோபு பார்த்தானேயானல் "ஆஹா, நான் இந் தப் பாண்டமாக மாறக்கூடாதா!" என்று ஏங்குவான்.

"லக்ஷ்மி!"

திடுக்கிட்டுத் திரும்பிப்பார்த்தாள். அவள் முகத்தில் சந்திரிகை பூரண மாக ஒளி வீசியது.

"யஜமான்!" அந்தக் குரலில் நடுக்கமோ அன்றி அச்சமோ இல்லை. உதடுகள் எப்பொழுதும்போல் சிறிது மலர்ந்திருந்தன.

கொஞ்ச நேரம் வேறு ஒரு வார்த்தையும் வெளிவரவில்லை.

"லக்ஷ்மி"

"என்ன?"

பழையபடி மௌனம்.

"லக்ஷ்மி, அதோ அந்த மேடைக்கு வருகிறாயா?"

"ஏன்?"|

"வாயேன்; சொல்லுகிறேன்."

அவள் எழுந்திருந்து அவன் பின்னல் போகலானள். போகும் நடை யைப் பார்த்தால் வேறுவிதமாக நினைக்கமுடியவில்லை. ஆனல் பெண் களின் மனதை யாரறிவார்? அவள் மார்பு சிறிது விம்மி விம்மி தணிவ

லைதப் பார்க்கும்போது, அது அவன் மனதின் உள்ளூற ஓடிக்கொண்டிருக்கும் சந்தோஷத்தின் அறிகுறியன்றி வேறு ஒன்றும் இருக்கமுடியாது.

"இதோ நிலா எவ்வளவு அழகாக விழுகிறது, பார்த்தாயா?"

"ஆமாம்."

"இம்மாதிரி சமயங்களில் கதையில் வரும் காதலர்கள் என்ன செய்வார்கள், தெரியுமா?"

"என்ன செய்வார்கள்?" கதையென்ற சொல்லைக் கேட்டதுமே காலையில் மலரும் பதும மலரைப்போல் அவள் முகம் சிவந்தது.

"ஒருவரையொருவர் முத்தமிடுவார்கள்."

"அப்படியா?" அதில் ஆச்சரியமில்லை. ஆனால் குறும்பு தொனித்தது.

"ஆமா! எப்படித் தெரியுமா?"

"எப்படி?"

அவ்வார்த்தை வெளிவந்ததோ இல்லையோ அவளை மார்போடணைத்து முகத்தில் முத்தமிட்டான், உண்மையில் இதை அவள் எதிர்பார்க்கவில்லை.

"ஐயோ, விட்டுவிடுங்கள்" என்று மெதுவாகப் போராடினாள்.

அவன் அதைக் கேட்டால்தானே! அவளது கன்னங்களும் கண்களும் கோபுவினுடைய உதடுகளில் அகப்பட்டுக் களிப்படைந்தன.

"ஐயோ விட்டுவிடுங்களேன், அம்மா வந்து விடுவார்கள்". இந்தச் சமயத்தில் அவள் குரலில் சிறிது நடுக்கம் தென்பட்டது.

"அம்மா எப்போதே தூங்கிவிட்டாள்" என்று கோபுவின் உதடுகளிலிருந்து தெரிந்தும் தெரியாததுமாக வெளிவந்தன. அவனது அணைப்பின் சுகத்தை விட்டுவிட லக்ஷ்மியின் மனம் இடங்கொடுக்கவில்லை.

தான் உட்படும் செய்கை பாவமானது என்றோ, வேலைக்காரிக்கும் யஜமானுக்கும் இடையிலிருக்கும் பள்ளத்தாக்கு மிகவும் பயங்கரமானது அல்லது நீண்டது என்றோ, உலகம் பொல்லாதது, நாளை நாம் அதன்முன் தலைகுனியவேண்டி வருமென்றோ அவள் கொஞ்சமும் நினைக்கவில்லை. அவள் மனக்கண் முன் பட்டது கோபுவின் மோஹனைகமான உருவம், இனிமையான சொற்கள். அவளுக்கு உள்ளும் புறமும கோபு மயமாகவே தோன்றியது. அப்படியானால் அது சந்தேகமில்லாமல் காதல் மயக்கம் தான்.

ஆனால் கோபு! அவனது கைகள் அவளது அணைப்புக்கு துடித்தன. மார்பு அவளது நெஞ்சை முத்தமிட ஏங்கியது. (இதே அவஸ்தைதான் அவளுக்கும்.) "ஆஹா, லக்ஷ்மி என்னை எவ்வளவு விரும்புகிறாள்! என் மனம எவ்வளவு தூரம் அவளைக் காதலிக்கிறது!" என்று இறும்பூதுகூட அடைந்தான். பாவி! காதல்கொண்டிருந்தால் அவளுக்குக் குற்றமிழைக்க அவன் மனம் சம்மதிக்குமா? அன்றி, அவன் அறிவுதான் தங்களிருவர்க்கிடையில் இருக்கும் வேறுபாட்டை எடுத்துச் சொல்லாமலிருக்குமா?

"அம்மாவிடத்தில் கூறி உன்னைக் கட்டாயம் கலியாணம் செய்து கொள்ளுகிறேன்" என்ற வார்த்தை எவ்வளவு தூரம் உண்மை என்பதை பொறுத்திருந்து பார்ப்போம்.

ஐயோ! இரண்டு காதலர்கள் தெரியாமல் தப்புச் செய்துவிட்டார்களே என்று காலம் பொறுக்குமா? அல்லது இயற்கைதான் மறைக்குமா? நாட்கள் நிமிஷங்களென வோட மாதம் வாரங்களென கழிந்தன.

இரண்டு, மூன்று, நான்கு: கோபுவின் உறுதி மொழி நிலைக்கும்படியான குறிகளொன்றும் தோன்றவில்லை. தங்களுக்கே உரித்தான பொறுமையைக்கூட லக்ஷ்மி கோபிக்க வேண்டி வரும்போலிருந்தது. ஆசை வார்த்தைகளைக் கூறி நாட்களைக் கடத்த ஆரம்பித்தான்.

"இனி விஷயத்தை மறைக்கமுடியாது அம்மாவிடத்தில் உண்மையை கூறப்போகிறேன்" என்று சிறிது கடினமாகக் கூறினாள் லக்ஷ்மி. "இல்லை, நானே நாளை சொல்லிவிடுகிறேன்" என்றான்.

கோபுவின் மனம் பலவிதமாகச் சுழன்றது. இந்த அவமானத்தை தாயினிடம் சொல்வதா? ஒரு வேலைக்காரியை தான் மணப்பதா?

ஏதோ ஒரு முடிவுடன் கோபு தன் தாயாரிடம் போய் "அம்மா, ஊரிலெல்லாம் நம் லக்ஷ்மியைப்பற்றி குசு குசுவென்று பேசுகிறார்களே" வென்று பச்சிளங் குழவி மாதிரி நடித்துப் பேசினான்.

"என்ன?"

"ஆமாம்மா, நம்ம பக்கத்துவீட்டு சமயல்கார முத்துவுடன் சிநேகமாயிருக்கிறாளாம். இப்பொழுது கர்ப்பிணி கூடவாமே?"

ஏனோ அந்தப் பாவியினுடைய நாக்கு அழுகி விழவில்லை!

"என்ன! உண்மையாகவா?" அவள் குரல், ஆச்சரியம், சந்தேகம், கோபம் பல கூடி அலறியது. லக்ஷ்மி அப்பேர்ப்பட்ட பாவம் பண்ணுவாளா? அவளால் அதை நம்ப முடியவில்லை.

"லக்ஷ்மி" என்று கத்தினாள்.

கொஞ்ச நேரத்தில் 'என்ன?' என்ற பதிலுடன் எதிரே வந்தாள். எஜமானியின் குரலின் வேகத்தைக் கேட்டு பயந்த லக்ஷ்மி கோபுவைப் பார்த்ததும் கொஞ்சம் நிம்மதி யடைந்தாள். ஆனால்...............

"சண்டாளி, நீ இவ்வளவு கெட்டவள் என்று தெரியாதே" என்ற வார்த்தை வெளிவந்ததோ இல்லையோ, இடியுண்ட சர்ப்பம்போல் நடுங்கினாள்.

"நீ இப்போது கர்ப்பிணிதானே?"

"ஆமா" மென்ற பதில் கிணற்றிலிருந்து வந்தது போலிருந்தது.

"இனி க்ஷணநேரமும் நீ இந்த வீட்டில் இருக்கக்கூடாது. உடனே வெளியே போ."

"அம்மா !............யஜமான் !"

"சீ, அவன் என்னடி வேண்டியிருக்கு. நட வெளியே. இந்தா பத்து ரூபாய்" என்று மடியிலிருந்த நோட்டொன்றை எடுத்து வீசியெறிந்தாள்.

தாயும் மகனும் அங்கிருந்து போய்விட்டார்கள்.

லக்ஷ்மிக்கு உண்மை விளங்கவில்லை. ஆனால் காதலன் பேரில் என்னவேனும் சந்தேகம் உதிக்கவில்லை. அன்பான யஜமானி திடீரென்று இப்படி மாறிவிட்டாளே! அப்பொழுதுதான் வேலைக்காரிக்கும் யஜமானிக்கும் உள்ள வித்தியாசம் முழு ரூபத்துடன் அவளுக்கு தெரியவந்தது.

அங்கிருந்து பக்கத்துக் கிராமத்தில் போய் ஒரு பெண்ணிடம், "அம்மா, என் புருஷன் இறந்து விட்டார். இதோ வயிற்றிலிருக்கும் சிசுவுக்காக வேலைசெய்ய வேண்டியிருக்கிறது. பிறகு ஆறோ, குளமோ...... ......" என்று சொன்னதும் இவளை வேலைக்கு வைத்துக்கொண்டாள் அந்த நற்குணம் படைத்தவள். அந்த மட்டிலும் அதிர்ஷ்டசாலிதான்

சௌக்கியமாக பெண் குழந்தை பிறந்தது. ஒருவருக்கும் தெரியாமல் ஒருநா ளிரவில் அதை எடுத்துக்கொண்டு பழைய யஜமானியின் வீட்டிற்குச் சென்று தோட்டத்தின் ஓரிடத்தில் குழந்தையை மெதுவாகக் கிடத்திவிட்டு ஓட்டம் பிடித்தாள்.

அந்த இரவில் பெருக்கெடுத்தோடும் ஆற்றங்கரையின் முன் லக்ஷ்மி நீண்டநேரம் அசைவற்று நின்று கொண்டிருந்தாள். ஆனால் உயிரை விடத் தைரியம் வரவில்லை.

திரும்பி வந்து பார்க்கும்போது குழந்தையைக் காணவில்லை. அது கோபுவின் தாயாரது கையில் சுகமாகத் தூங்கிக் கொண்டிருந்தது. அவளுக்குத் தெரியுமா அது தன்னுடைய மகன் கோபுவின் குழந்தை யென்று.

பிறகு எப்படி பணக்கார கோபு ஊதாரித்தனமாய் கெட்டழிந்தான் என்றும், எப்படி பணக்காரப் பட்டதாரிப் பெண்ணொருத்தியை மணம் செய்தான் என்றும், அவள் எப்படி கோபுவிற்கு துரோகமிழைத்துவிட்டு மோட்டார் ஓட்டியுடன் ஓடிப்போனாள் என்றும், எப்படி லக்ஷ்மியின் குழந்தை ராதா வென்ற பெயருடன் செல்வமுடன் வளர்ந்து வந்தது என்றும் சொல்லபபோனால் அது மிகவும் விரிந்துபோம்.

உயிரைவிடப் பயந்த காரணத்தால் உலகமும் காலமும் சேர்ந்து லக்ஷ்மியை நன்றாகப் பழி வாங்கியது. பிணங் கொத்தித் தின்னும் கழுகுகள் போல் பெண்ணின் தனம் கொத்தித் தின்னும் காமுகர்கள் அவளது வனப்பு மிகுந்த உடலைக் குலைத்து விட்டார்கள்.

பதினைந்து வருடங்கள் ஓடி மறைந்தன. லக்ஷ்மியின் நிலை வர வர கெட்டு வந்தது. இறப்பதற்கு முன்னால் தன் அருமைக் குழந்தையின் முகத்தை ஒரு தடவையாவது பார்ப்போம் என்ற எண்ணத்துடன் மறந்து போன அந்த கிராமத்தை நோக்கி நடந்தாள். கோபுவினுடைய வாழ்க்கை

யையும், அவன் தனக்குச் செய்த துரோகத்தையும் உள்ளது உள்ளபடியே கேள்விப்பட்டிருந்தாள். ஆனாலும் அவள் மனம் அவனை வெறுக்கவில்லை.

அந்தப் பழைய யஜமானியிடத்திலேயே பார்வதி என்ற பெயருடன் வேலைக்கு அமர்ந்தாள். உடல் ஒட்டி காய்ந்து போயிருக்கும் இந்தப் பெண் தான் லக்ஷ்மி என்று கோபுவின் தாயாரால் எப்படிக் கண்டுபிடிக்க முடியும்?

தாய் என்று தெரியாமலே குழந்தை ராதா லக்ஷ்மியிடம் அத்யந்த ப்ரேமை கொண்டது. இருவரும் ஒருவரை யொருவர் ஒரு க்ஷணமும் பிரிவதில்லை. லக்ஷ்மியிடம் பழைய அத்தை பாட்டி கதைகளைக் கேட்பதில் ராதாவிற்கு அலாதி ப்ரியம். கோபுவின் தாயாரும் இவர்களது உறவைக் கண்டிக்கவில்லை. மகனின் நடத்தை ஏழை எளியவர்களிடம் அவளுக்கு பாசத்தை யுண்டாக்கியது.

லக்ஷ்மியின் நிலை மோசமாகிக்கொண்டே வந்தது. ஒருநாள் ராதாவும் அவளது பாட்டியும் உட்கார்ந்து கொண்டிருக்கும்போது தன்னுடைய சொந்த வாழ்க்கை பூராவையும் கதைபோல் சொல்லி வந்தாள். இருவரும் அவ் வேலைக்காரப் பெண்ணுக்காகக் கண்ணீர் வடித்தார்கள். ஆனால் தங்கள் முன்னால் இருக்கும் பார்வதிதான் அவ் வேலைக்காரி என்று தெரிந்தால் என்ன சொல்லுவார்களோ?

தனது அந்தியகாலம் நெருங்கி விட்டது என்றுணர்ந்த லக்ஷ்மி ஒரு கடிதத்தில், "கண்ணே ராதா! நான் உண்மையில் உன்னுடைய தாய். அன்று வேலைக்காரி கதை சொன்னேனே அந்த வேலைக்காரி நான்தான். என்னுள்ளே அடங்கி யிருந்த இந்த இரகஸியத்தை இக் கடைசி காலத்தில் ஏன் தெரிவிக்கிறேனென்றால் உன் அழகைக் கண்டு, உன் தந்தையுடன் பழகும் எவ்வளவோ பணக்காரர்கள் உன் பேரில் மோகம் கொண்டிருக்கிறார்கள். நீ யார் மேல் எவ்வளவு நம்பிக்கை யுடையவளா யிருந்தாலும் உன் உடலை மாத்திரம் அவருக்கு அர்ப்பணித்து விடாதே. எல்லா மனிதர்களும் ஒன்றுதான். எனது கடைசி ஆசீர்வாதம். வேணும்." என்று எழுதி ராதாவின் அறையில் வைத்துவிட்டு தன் குடிசையில் போய்ப் படுத்தவள், மறுபடி அவளுக்கு உணர்வு தோன்றவேயில்லை.

இந்தக் கடிதம் கிடைத்த பிறகுதான் ராதா குடிசையை நோக்கி அப் பெரும் புயலில் ஓடியது; லக்ஷ்மியின் அருகில் மூர்ச்சித்து விழுந்தது.

* * * *

கோபுவும் அவனுடைய தாயாரும் கையில் லாந்தருடன் ராதாவைத் தேடிக்கொண்டு குடிசைக்கு வந்தார்கள். திடுக்கிட்ட அம் மூதாட்டி ஓடிச் சென்று ராதையை மடிமீது எடுத்து வைத்து முந்தானையால் விசிறலானாள். கொஞ்ச நேரத்தில் ராதை கண்ணைத் திறக்க,

"ராதா!' என்று மிகவும் அன்போடு அழைத்துக்கொண்டே கோபு அவளது இரண்டு கைகளையும் தன் கையிலெடுத்து கனிவு தோன்ற அவள் முகத்தைப் பார்த்தான். என்ன இருந்தாலும், எவ்வளவு கெட்டவனானாலும், தன்னுடைய ரத்த மல்லவா? பாசமில்லாமலா போகும்?

சடக்கென்று எழுந்திருந்து "என்னைத் தொடாதே" என்று கத்தினாள். பாம்பை மிதித்தவன்போல் கோபு இரண்டடி பின்னாலே போனான்.

# ஜ்யோதிஷ பல ரகஸ்யம்

(சி. பி. ஆனந்தம்.



## 16. சனி உலகம்—அதன் இயற்கை அமைப்பு

(சென்ற இதழ்த் தொடர்ச்சி).

இதுவும் அயல் ஒளி பெறுவனவற்றுள் ஒன்றாகும். இதர கோள்களைப் போலவே சூரியனிட மிருந்து தான் ஒளியும்-உஷ்ணமும் பெற்று வருகின்ற ஒன்று என்னலாம். ஆனால், அவ் ஒளியும்-உஷ்ணமும் அதனிடம் இயலாக வுள்ளவையினும் மிகக் குறைந்தது. இது வீசும் ஒளி செந்நிறத்து இருப்பதிலிருந்து உஷ்ணந் தணியப் பெறாத நெருப்புக் கோளம் என்று கூறலாம். இதன் இயலான உஷ்ணமே இதற்கு ஜீவாதார மென்கின்றனர். நமக்கு சூரியனிட மிருந்து கிடைக்கும் உஷ்ணத்தில் நூற்றில் ஒரு பங்குதான் சனிக் கோள் பெற்று வருகிறதாம்.

இதன் மேற் பரப்பைத் தெளிவாய்க் காணுவதற் கில்லாவிடினும், இதர கிரகங்களுடன் ஒப்பாகும் சில மட்டும் புலனாகத் தக்கதாம். வியாழனைப் போல இதன் சமன் கோட்டிற்கு மேலே தொகுப்பான வளைவுகளும்-மேகங்களும் உள்ளன. அதன் மேற் பரப்பின் மீதுள்ள வெண்ணிறப் புள்ளிகள் சில காலங்களில் தோன்றி வருவதில்லை யாயினும், சனி தன்னைச் சுற்றி வரும் கதியை நிர்ணயித்துக் காட்ட அப் புள்ளிகளின் காட்சிக் கிரமம் உதவியாக விருக்கின்றதாம். இதன் மூலமே தான் சனி ஒரு முறை தன்னை சுற்றி முடிக்க பத்தரை மணிப் பொழுது ஏறக்குறைய பிடிக்கிற தெனக் கணக்கிட முடிந்ததாம்.

இவ்விதம் தன்னைத் தான் சுற்றிக்கொள்ளும் ஒரு கதியும், இதர கோள்களைப்போன்று சூர்யனை நடுவாக்கி அதனைச் சுற்றி ஓடும் ஒரு கதியும் உடைய தனி உலகில் ஜீவர்கள் வசித்து வருகின்றனரா வென்று பெரிதும் ஆராயப்பட்டிருக்கின்றது. பொதுவில், இதர கோள்களைப் போன்ற இவ் இருவித கதிகளும் இருப்பதாலேயே ஜீவர்கள் இருப்பார்கள் என்று நிச்சயித்து விடுவதற்கில்லை. ஜீவர்கள் தோன்றுவதற்கும்-வாசஞ் செய்து வருவதற்கும் ஏற்ற இதர அம்சங்கள் அனைத்தும் பூரணமாக விருத்தல் அவசிய

---

வெறுப்புடன், திரும்பி கட்டிலினருகே சென்று, "அம்மா, அம்மா" வென்று அலறினள். தாயும் மகனும் ஒன்றும் புரியாமல் திகைத்தார்கள். முகத்தைக் கோபுவின் பக்கம் திருப்பாமலேயே, தூரத்தில் நிற்கும் தன் தந்தையின் முகத்தில் தன் கையிலிருந்த கடிதத்தை வீசி யடித்தாள் ராதை.

அந்த வெள்ளைக்காகிதம் கோபுவின் வாடின முகத்தை முத்தமிட்டு கீழே விழுந்து, அங்கிருந்த எல்லோரையும் பார்த்துச் சிரித்தது.

மாகும். பத்தரை மணிப் பொழுதுள் அது ஒரு முறை தன்னைத் தான் சுற்றி விடுவதிலிருந்து அதற்கு இரவு-பகல் சேர்ந்த ஒரு தினத்தின் அளவு (Duration of the Day) பத்தரை மணிப் பொழுதுதான் என்று ஏற்படுகிறது. அது சூர்யனை நடுவாக்கி ஒரு தடவை அதைச் சுற்றிவருவதற்கு நிலவாண்டு முப்பது ஆகிறது. இந்த முப்பது ஆண்டு உள்ள பொழுதே சனி ஆண்டாகும். இந்தப் பெரும் பொழுதுள் சனி உலகத்திற்குரிய பருவகால அளவுகளைக் காணவேண்டும். அவ்வழி பருவகால அளவுகளும் நீண்ட ஒரு பெரும்பொழுதாக வமையும். ஆனால், பருவங்களின பாகுபாடு சூர்யனின் ஒளி-உஷ்ணங்களாலேயேதான் நேருமாதலால், அதற்கேற்ற அளவு ஒளியும்-உஷ்ணமும் சூரியனிடமிருந்து அது பெறவில்லை-பெறுவதற்கேதுவில்லை யென்று அறிகிறோம். ஜீவர்களின் தோற்றத்திற்கும்-நிலைப்பிற்கும் சூரியனிடமிருந்து கிடைக்கும் ஒளி-உஷ்ணமேதான் முக்கிய ஆதாரமாகும். இது மிகவும் குறைவாக விருத்தலின, அங்கு ஜீவர்கள் வசித்தலாவில்லை யென்றே உறுதி செய்கின்றனர். அத்துடன் சனி அண்டம் ஜீவர்கள் தோன்றுவதற்கும்-வாழ்ந்து வருவதற்கும் ஏற்ற அளவு அதன் உஷ்ணம் இன்னும் தணியப் பெறவில்லையாம்.

## பால்மதிகள்-அல்லது உபக்கிரகங்கள்.

ஜீவகோடிகளின் வாசத்திற்கேற்ற ஒரு நிலையைப் பெறாத சனி உலகம் மற்ற எல்லாக் கோள்களினும் நிலவுலகினுக்குப் பலன் செய்வதில் அதி முக்கியம் வாய்ந்த ஒன்றாகக் கருதப் பெறுகின்றது. அவ்வாறு கருதப் பெறுவதற்கு ஆதாரமாக அதற்குள்ள இதர கோள்களுக்கெல்லாம் இல்லாத மதிவளையத் தொகுப்புக்களை மட்டுமின்றி, அதனைச் சுற்றிவரும் பால்மதிகள் அல்லது உபக்கிரகங்கள் ஒன்பதையும் சேர்த்துக்கொள்ளுகின்றனர். இவ் ஒன்பதும் இதுவரை வான ஆராய்ச்சிக்காரர் தங்கள் ஆராய்ச்சியில் கண்டவை. ஆனால், இன்னும் காணக்கூடியன-காணவேண்டியன-இன்னும் புலனாகாதன பல பல விருப்பதாக நம்புகின்றனர். மதிவளையத் தொகுப்புகளுக்குள்ளேயே பல்லாயிரக்கணக்கான-ஏன் லட்சக்கணக்கில்-கோடிக் கணக்கில் கோளாகாரமான (Globular)வை இருப்பதாகத் தெரிகிறது. அவை அனைத்தும் வெறுங்காட்சித் தோற்றமென்று (Optic Illusion) சொல்லி விடுவதற்கில்லாமல், அதிசய ஒளிகளைப் பல வண்ணங்களில் வீசி, கவர்ச்சி மிக்க சோபையுடன் காட்சி அளித்துக் கொண்டிருக்கின்றன. இவ்விதம் மோகன உருளைகள் பல பல நெருங்கிச் சேர்ந்து சனி உலகை வளைத்து சூழ்ந்துவரும் அபூர்வம் ஆராய்ச்சிக்காரர்களுக்கு முக்கியம் வாய்ந்ததாக விருக்கிறது.

இவ்விதம் சனி உலகைச் சுற்றி வரும் எண்ணில் பல அண்டங்களையெல்லாம் சூர்யனை நடுவாக்கிச் சுற்றி ஓடும் அண்டங்களை 'சூர்ய குடும்பம்' (Solar System) என்பது போல 'சனி குடும்பம்' என்னலாமென்று மதிக்கின்றனர். சனி குடும்பத்தைச் சார்ந்த பலவற்றுள்ளும் இதுவரை கண்டன மதிவளையத் தொகுப்புக்களைத் தவிர்த்து ஒன்பது பால் மதிகளேதான். பொதுவில், கோள்களுக்குரிய பால் மதிகளை அவ் அவற்றின் உபக்கிரகங்கள் என்றே மேல் நாட்டினர் மதிப்பிடுகின்றனர். சனி உலகின் நிலவுகளான இந்த உபக்கிரகங்களைப்பற்றி அறிவது ருசிகரமாக விருக்கும்.

# வாழ்க்கையின் குறிக்கோள்

(K. V. சிவசுப்பிரமணியன், B. A.,)

இயற்கைவள மனைத்தும் இனிதமைந்த புனிதப் பொன்னருவிகள் சூழ்ந்து வளைந்தோடும் திருக்குற்றாலமலை. அதனையடுத்ததோர் சிற்றூரினில் மதிவதனன் என்றதோர் அதியழகன் வசித்து வந்தான். அவன், புவியுறு மங்கையரனைவரும் விரும்பும் கவினுறு காளைப் பருவத்தினன். இருபத்து மூன்றாண்டுகள் நிரம்பப் பெற்றவன். அறிவில் அருக்கனினும் அதிகன். பொறை அடக்கம், இன்னாசெய்யாமை, இன்சொலுடைமை ஆகியாய ஆடவர்க்கின்றியமையா அரும் பண்புகளனைத்தும் அமையப் பெற்றவன். அவன் தன்னையொத்த உருவும் திருவும் பருவமும் குலனும் குணனுமுடைய குணமாலை என்ற கற்பரசியைக் காதலித்து கடிமணம் புரிந்தனன். கணவன் கருதியதைக் குறிப்பறிந்து செய்து முடிக்கும் குணமாலையை அவன் கண்ணின் இமையெனக் காத்து இல்லற வாழ்வினை இனிது நடத்தி வந்தான். அவளும் "தற்காத்து தற்கொண்டாற் பேணித் தகைசான்ற சொற்காத்துச் சோர்விலாள் பெண்" என்ற ஆன்றோருள்மொழிக்கு இலக்காகி கணவனை உயிரினும் பெரிதென நேசித்து வந்தனள். இளங்காதலரிருவரும் குற்றால மலைக்கண் முகிற்குழாங்கள் மூண்டெழுந்து அசைந்தும் ஆடியும் ஓடியும் மலை முகடுகளிற் சூழ்ந்து தவழ்ந்து கிடக்கும காட்சியையும், மலைகளின் மண் புலனாகாவாறு பசும்பட்டுப் போர்த்தாலெனப் பொழில்கள் துதைந்துள்ள அழகினையும், மலையுச்சியினின்றும் தரைவரை நிரைநிரையாய்ச் செறிந்து நிற்கும் உயர்ந்த கமுகினையும் அவைகளுடன் நீக்கமின்றி வாழ்க்கைத் துணையென சுற்றிச் சுற்றிப் பின்னிக் கிடக்கும் கான் பரந்த கொடிகளின் ஈட்டத்தையும், பசிய வானில் மின்னொளி தோன்றி மறைவதுபோல் மலைத் தொடர்களின் நடுவண் வளைந்து வளைந்தோடும் சிற்றாறுகளின் தோற்றத்தையும் கண்டு இயற்கையோடியைந்த இன்பத்தினை நுகர்ந்த நாட்கள் பல.

இங்ஙனம் இளங்காதலரிருவரும் களிதுளும்பக் கழித்த இன்ப வாழ்வினைக் கெடுக்க காலனெனத் தோன்றினள் கடுமனம் படைத்த காமினி. மதிவதனன் அவளுக்கு ஒன்று விட்ட மாமன். கற்புடைப் பெண்டிர்க்குரிய நலனுடைப் பண்புகள் பல உடையாளேனும், அழுக்காறு முதலிய சில தீய பண்புகளுக்கு அடிமைப்பட்டிருந்தாள் காமினி. கன்னிப்பருவம் முதல் காதலித்த தன் மாமன் மதிவதனனை அடைய முடியாமற் போனது அவள் வாழ்க்கையிலோர் ஏமாற்றம். அதனால் மதிவதனனும் குணமாலையும் தமது காதலெனும் நன்னீர் பெய்து நலமுற வளர்த்து வந்த இல்லறத் தருவினை வெட்டி வீழ்த்தவந்த கோடரியாக மாறினள் அவள். மலரும் மணமுமென அவர்கள் நடத்திய வாழ்க்கையைக் கண்டு அழலுறு அரவமெனச் சீறி பெருமூச் செறிந்தாள். பொறாமைப்பேய் அவளை யாட்சி கொண்டது. உடனே தனது சிறந்த பண்புகள் பலவற்றாலன்றோ பிறர் தன்னைப் போற்றுகின்றனர் என்ற உணர்வை யிழந்தனள். காதலர்களது வாழ்க்கையிலுற்ற இன்ப நிகழ்ச்சி ஒவ்வொன்றும் தன்னுடலிற் றைக்குமோர் முள்ளெனக் கருதினள். காரணமின்றி அவர்கள்மேல் ஐயம் கொண்டாள். அவர்களைக் காணுந்தோறும் கொல்லுலைத் துருத்தி யென இடையீடின்றிப் பெரு

மூச்செறிந்தனள். விளையாத இன்ப வாழ்வினைக் கண்டு எரியுறு புழுவெனத் துடித்தனள். அஞ்ஞான்று அக் காதலாத இன்பவாழ்வினை பொறாமைக் கோடரி கொண்டு வீழ்த்தி இன்பங் காண உறுதிகொண்டது அவள் உள்ளம். கெடுமதி தூண்டவே பாதகம் நினைத்தனள். மதிவதனனுக்கும் குணமாலைக்கு மிடையே இயைந்திருந்த அன்பெனுந் தளையை அறுத்தற்குரிய வஞ்சகநெறியை நாடினள். அதிர்ஷ்ட தேவதையும் அவளது அநியாய செயலுக்குத் துணை நின்றது.

இந் நிலையில் அவ்வூர்க் கூலவாணிகன் ஒருவனுக்கும் மதிவதனனுக்கு மிடையே நிகழ்ந்து வந்த வழக்கினில் மாற்றான் மாண்புற வெற்றிபெற்றான் என நீதிமன்றத்தலைவர் முடிவு கூறினர். அதன் காரணமாக, அளகர் கோனும் அஞ்சற்குரிய பெருநிதி படைத்த மதிவதனன் வறுமை வாய்ப்பட்டு பெருமை யிழந்தனன். காமினியின் மன மாறுதலை யுணராத மதிவதனன், அவள், உடன்பிறந்த உத்தமியின் புத்திரியாதலின், இழுக்கலுடையுழி யூன்றுகோலெனத் தனக்கு உதவுவள் என் றெண்ணினான். ஆனால் அவளோ குணமாலையைக் கடிந்து புறத் தொதுக்கித் தள்ளினாலன்றி தான் அவனுக்கு ஒரு உதவியும் செய்யப் போவதில்லை என்று அறிவித்து விட்டாள். குணமாலையின் கூட்டுறவினின்றும் பிரிந்து வந்துவிட்டால் வேண்டிய உதவி யனைத்தும் அளிப்பதாகக் கூறினாள். இச் சுடுமாற்றம் கேட்ட மதிவதனன் இடியேறுண்ட நாகமெனத் துடித்தனன். இத்தகைய தீமொழிகள் காமினியின் வாயினின்றும் வருமென்று கனவினும் கருதினானில்லை பேதை. மலையே எதிர்த்து வரினும் நிலைகலங்காத மதிவதனன் ஒன்றுஞ் செயத் தோன்றாதவனாய், “என்னே இஞ்ஞாலத்தின் கோலம்! வாதும் சூதும் செய்து வருந்திப் பேதுறும் பாதகமக்கள் நிறைந்த திவ்வுலகம். இவ்வுலகமேடையில் வினைக்கயிற்றிலாடும் மானிடப் பதுமைகளின் நாடக வாழ்க்கையின் நிலையை யுணராதன்றோ அழுக்காறு, அவா, வெகுளியெனும் பேய்க்குணங்களின் போழ்வாய்க் கிரையாகி வினைமுன்னூந்த, மதிபின் செல்ல சிற்றின்பப் பிரியர்களாகி வருந்தி முடிவில் ஒருபிடி சாம்பலாக வெந்து மண்ணொடு மண்ணாய்ப் போகின்றனர். நெருநல் உளனொருவன் இன்றில்லை என்னும் பெருமை பிறங்கியதன்றோ இவ்வுலகம். இதையறியாத காமினி எங்கள் காதல் வாழ்க்கையைக் கலைக்க முற்பட்டது வியப்பன்று!” எனக் கடலுறு அலையென ஒன்றன்பின் னொன்றாய்த் தோன்றிய எண்ணங்களை ஆராய்ந்தான். உடுக்கை யிழந்தவன் கைபோன்று தன் வாழ்க்கையின் இன்ப துன்பங்களைப் பங்கிட்டனுபவிக்கும் பங்கயச் செல்வியின் பண்புகளமைந்த குணமாலையை காமினியின் செல்வத்திற்கும் ஆதரவிற்கும் கைவிடும் கைதவனல்லன் மதிவதனன். காமினியையும் அவளது பொருள்களையும் கானுறு காஞ்சிரங் கனியெனக் கடிந்து வெறுத்தனன்; அதுகண்ட காமினியும் இச் சூழ்ச்சியாலேனும் மதிவதனன் தன்னைக் காதலிப்பானென எண்ணி யிருந்த எண்ணத்தையும் அறவே மறந்தாள்; அவளை அவளது மனம் வஞ்சம் தீர்த்துக்கொள்ளும் தீ நெறியிலுய்த்தது. மறுநாளே, அவளது தூண்டுதலால், மதவதனனின் பெற்றோர்கள் வாங்கியிருந்ததோர் கடனைத் திருப்பிக் கொடுக்காததன் காரணமாக அவன்மேல் வழக்குத் தொடர்ந்து சிறையி லிடப்பட்டான். காதலர்க்குற்ற இன்பத்திலும் துன்பத்திலும் பங்கெடுத்துக் கொள்ளுதல் கற்புடை மகளிரின் பொற்

புடைப் பண்பாகலின் குணமாலையும் சிறையில் கணவனோடு உடனுறை வாழ்க்கையை மேற்கொண்டனள். துன்ப அலைகள் நிறைந்த சிறை வாழ்க்கையில் போதுமென்ற மனமே பொன்செயு மருந்து என்ற பொன் மொழியை புந்தியிற் பதித்துச் சிந்தனை கலங்காது சிறைக்கூடத்தை இன்ப நிறைக் கூடமாகக் கருதி காலங் கழித்தனர். குணமாலை அடுக்களை புகுந்து அட்டில் அமைக்குங்கால் மதிவதனன் விதியினை மதியால் வென்ற வீரகர் பலரின் வரலாற்றினை அவளுக்குப் படித்துக் காட்டுவான். தன்னுடன் சிறை கோட்பட்டுள்ளாரது துன்பங் கண்டுழி அவர்தமை இன்பங் காணுறு நெறியின்கண் இனிது உய்ப்பன். அச்செயலில் குணமாலையும் அவனுக்குறு துணையாய் நிற்பள். கணவன் கவலைக்கடலில் மூழ்கித் தயங்குங்கால் அவள் தனது தேமதுரத் தீஞ்சுவை மாற்றத்தால் அவனைக் கரையேற்றுவாள். செந்திரு வந்துற்றாலும் வெந்துயர் வந்துற்றாலும் உளங்கலங்காது உயிர்க் காதலருடன் உறையும் வாழ்க்கையே உம்பர் நாட்டோரின் உயர்ந்ததென் பதை யுணர்ந்தனள். ஒப்பற்ற தனிப் பரம் பொருள் பற்றற்ற துறவிகளையும் பாரோ ரறியப் பரிசோதித்தன்றோ ஆட் கொள்கின்றனன்; அங்ஙனமாக மதிவதனனையும் சோதிப்பது ஆச்சரிய மன்றன்றோ?

இங்ஙனஞ் சில திங்கள் சிறையி லிருந்துழி, அவர்கள்பா லிருந்த கொஞ்சம் பொருளும் செலவழிந்து விடவே வறுமைப்பிணி அவர்களை வஞ்சித்ததெனினும் ஒருவரும் மனங் கலங்கினாரில்லை. சிறை வாழ்க்கையில் தாய் தந்தையரோடு பங்கெடுத்துக்கொண்ட அவர் தம் குமரன், அவர்களது துன்பத்தினை யுணராது குறுநடை நடந்து மழலை பேசி மதிப்பூட்டினன்.

ஒருநாள் நிறைந்த அமாவாசை; மாலைநேரம். கதிரவன் குடபால் வீழ்ந்தனன். அந்திப் பொழுது வந்துற்றது. இளமென் காற்று இன்பமுற வீசியது. அது சமயம் காமினியின் ஏவலாளனொருவன் தனித்திருந்த மதிவதனனை யண்மி, “பெருந்தகாய்! நின் தங்கை மகள் இன்றிம் மண்ணுலக வாழ்வை நீத்து விண்ணுல கடைந்த செய்தியை நினக் குணர்த்தும் கருத்துபற்றி அடியேன் இங்குற்றனன். மற்றொன்று மிக முக்கியமானது. அவள் தனது செல்வ மனைத்தும் தனது தாயபந்து ஒருவன் அடையுமாறு முறிச் சீட்டெழுதி உயிர் நீத்தனள்; நீ உடன்படின் அச்சீட்டினை மிக எளிதில் கவர்ந்து நின்பாற் சேர்க்க வல்லேன். அதைப்பெற்றுத் தீயிட்டுக் கொளுத்தி விடுவாயாயின் அவளது பொன்னும், பொருளும், நிலனும் புலனும் நினதே என்பதை யுணர்தி. அன்ப! இதுபற்றி நின் கருத்து யாது?” எனக் கூறி யொருபுடை யொதுங்கி வாளா நின்றனன். ஏவலாளன் பிறரை வஞ்சிக்குமாறுரைத்த கொடுஞ்சொல் எரிபுண்ணிலுறும் அம்பென மதிவதனின் மனதில் தைத்தது. உடனே “நய வஞ்சகம் நாடிய கயவ! என்முன் ஒருக்கணமும் நில்லாதே, நம்பினோரை வஞ்சித்தல் அடாது. பிறர் பொருள் வெஃகின் அது ஆழ்ந்த நிரையத்துய்த்து விடும். உனது எண்ணத்தை அடியோடு மறந்து விடு” எனக் கூறி அவனைச் செலவிட்டு நிகழ்ந்தவற்றை காதலிக் குரைத்தனன். இருவரும் காமினி காலகதி யடைந்தது குறித்து பெரிதும் கலங்கிக் கதறி யழுவாராயினர். ஆனால் அவர்கள் பால் வந்து நயவஞ்சக மாற்றமுரைத்த ஏவலாளன் சிறைக்காதலர்களின் மனநிலையைப் பரிசோதிப்பான் வேண்டி காமினியா லனுப்பப்பட்ட தூதனென்பதை யறியார். பாவம்! காமினி

பொறுமைக் குணத்திற்கு அடிமைப்பட்டுக் கிடந்தாளெனினும் நற்குண நற்செயல்கள் நிறைந்த வனிதை. மதிவதனனுக்கும் நாதனுக்குமிடையே நிகழ்ந்த மொழிமாற்றுகளை அடுத்த அறையில் ஒளிந்து கேட்டுக்கொண்டிருந்த காமினி மதிவதனனின் மாசறு மனத்தின் மாண்பினை யுணர்ந்தனள்; மனவுறுதியை வியந்தனள்; தானிழைத்த தவறினை யுணர்ந்து தவித்தனள்; தன் வன்னெஞ்சினைக் கடிந்து கொண்டனள். உடனே மதிவதனனின் அறைக்குள் கண்ணீரும் கம்பலையுமாய் நுழைந்து அறியாமையால் தானிழைத்த தீங்கினைக் குறித்து வருந்தி மன்னிக்குமாறு வேண்டினள். அவனும் சென்றது கருதி வருந்த வேண்டாமெனக் கூறித் தேற்றினான்.

அன்று தொட்டு காமினி அவர்களுக்கு வேண்டிய யாவும் வெறுப்ப அளித்துக் காத்து வந்தமையால் காதலரிருவரும் காமினியின் ஆதரவில் ஆனந்தவாழ்க்கை நடாத்தினர். சிலநாளில் காமினி இவ்வுலக வாழ்வை நீத்தனள். உயிர் விடுமுன் தன் வீடுவாசல் செல்வமனைத்தும் மதிவதனனுக்குச் சேருமாறு ஏற்பாடு செய்துவிட்டு காதலரிருவரையும் அருகழைத்து,

ஒறுத்தார்க்கு ஒருநாளை இன்பம் பொறுத்தார்க்குப்
பொன்றுந் துணையும் புகழென வோதிய
பொய்யில் புலவர் பொருளுரை கொண்டு
வையக முழுதும் பொய் மயமே யாயினும்
ஐயநீ! அடக்கமாம் அரிய பண்பினால்
உய்யும் வகையுணர்ந் துயர்புகழீட்டினை.
அழுக்கா றகற்றி அன்பினைப் பெருக்கிய
ஒழுக்கமே யுயர்புகழீட்டு நெறியென
உணர்ந்தேனைய! உலகோர்க்கு மிவ்வாழ்வில்
எனைத்தகு நுதிக்கோ ளீதே யாக."

எனக் கூறி முகமலர்ச்சியுடன் உயிர் நீத்தனள்.

[இஃது, 18-ம் நூற்றாண்டின் பிற்பகுதியில் விளங்கிய ஆலிவர் கோல்டு ஸ்மித் என்ற ஆங்கிலேய கவிஞரால் "The BEE" என்ற வெளியீட்டில் எழுதப்பெற்ற கட்டுரைகளி லொன்றைத் தழுவி எழுதப்பட்டது.]



# மகிழும் நாடு

(குகை-ந. வெங்கடராமன்.)



[முன்குறிப்பு:—இஃது சிறந்த கட்டுரையாளரான பெர்ட்ராண்டு ரஸ்ஸல்-Bertrand Russel-என்னும் ஆங்கிலேயரின் ‘Sceptical essays’ என்னுந் தொகுதியில் ஒன்றான ‘Happiness in this Modern World’ என்னுங் கட்டுரையின் சாரமாகும். சீன நாகரிகத்தையும் ஐரோப்பிய நாகரிகத்தையும் ஒப்பிடுவதே அக் கட்டுரையின் குறிக்கோள். ஐரோப்பிய நாடுகளின் மூளைத்திறன் சிறந்ததாயிருந்தும் அத் திறன் நன்மையைவிடத் தீமையையே பெரிதும் நாடுவதால், ஐரோப்பியரின் மனோபாவத்தைவிடச் சீனரின் மனோபாவமே சிறந்ததென்றும், மகிழ்வான வாழ்விலும் சுதந்திர நிலையிலும் சீனரே தலைசிறந்தவரென்றும் ஆசிரியர் கண்டதால் சீன நாகரிகத்தைச் சிறப்பாய்க் கொண்டார். பேரெழுத்தாளர் ஸ்டீவன்ஸனும் (R L. Stevenson), ரஸ்ஸலும் வாழ்க்கை வியக்கத்திலே (வாழ்க்கையை நடத்தும் முறை) ஒன்றுபட்ட கருத்துடையோரென்பது முன்னவரின் ‘Apology for Idlers’ என்னுங் கட்டுரையின்கண் தெளிவுறும்.]

நாகரிகம் என்பதை அதன் பொதுப் பொருளில் நின்று நோக்குவோமானால் வட அமெரிக்கா, தென் அமெரிக்கா, ஐரோப்பா, பிரிட்டிஷ் தன்னாட்சி நாடுகள் (2-ம். ஆஸ்திரேலியா.) ஆகியனவே உலகின் தலைசிறந்த நாகரிக நாடுகளெனக் கூறலாகும். இப் பெரு நாடுகளுடன் சைனாவை ஒப்பு நோக்குங்கால் மிகப் பிற்பட்டதாகவே தோற்றும். ஏனெனில் பதினெட்டாம் நூற்றாண்டு தொடக்கமாக அதன் நாகரிகம் உயர்ந்ததாயில்லை. இருந்தும் ஐரோப்பா முதலியன மகிழ்ச்சியிலும் பிற நலன்களிலும் சைனாவைவிட உயர்ந்தனவல்ல.

சீன நாகரிகம், ஏசுகிறிஸ்துவுக்குச் சுமார் ஐந்நூறு ஆண்டுகட்கு முற்பிறந்த கன்ப்யூஷியஸ் (Confucius) என்னும் ரிஷியின் போதனையால் அடி கோலப்பட்ட தொன்றாகும். அன்னாரின் குணங்களும் மனோபாவங்களும் அந் நாகரிகத்திலே பிரதி பலிக்கின்றன. அவருடைய முயற்சிகளின் பயனாகச் சீன முன்னோர் ஒரு ஏகாதிபத்தியத்தை ஏற்படுத்தித் தங்களுக்குச் சொந்தமானவையாகக் கலை, இலக்கியம், நாகரிகம் முதலியவற்றை ஆக்கிக்கொண்டனர். ஆகவே தான் அவரின் திட்ட அமைப்பு பிறரின் கவனத்தை இழுக்கிறது. அவருடைய கொள்கைகள், சாதாரண மக்களால் அநுசரிக்க முடியாத கிறிஸ்தவத்தைப் போலன்றி, இயலும் செயலாகவே அமைந்துள்ளன. அச் சீனமுனி இயற்கையான விருப்பத்திற்கு மாறாக எதையும் நிர்மாணிக்கவில்லை. அவர் தம் கொள்கைகளில் நடு நிலைமையே மிகச் சிறந்தது. ‘இன்னா செய்தார்க்கும் இனியவே செய்தல்’ அவரால் ஏற்றுக் கொள்ளப்படாத ஒன்று. ‘தீமைக்குப் பதில் நன்மையைச்

செய்துவிட்டால் நன்மைக்குப் பதில் என்ன செய்வது ?' என்பதே அவர் கேள்வி. அவர் அபிப்பிராயம் 'நாம் அநீதிக்குப் பதில் நீதியையும், நன்மைக்குப் பதில் நன்மையையும் வழங்க வேண்டும்' என்பது.

["How do you regard the principle of returning good for evil?" And he replied: "*What, then, is to be the return for good? Rather should you return Justice for injustice, and good for good.*"]

அவர் காலத்தே பிருந்த மற்றொரு பெரியார் லாவ்—ட்ஸ் (Lao-Tze) என்பவர் தீமைக்குப் பதில் நன்மையைப் புரிதலாகிய கொள்கையைப் (அவர் கூற்று:—"நல்லவனிடத்தில் நல்லவனாகவே நடந்துகொள்ள வேண்டும். கெட்டவனிடத்திலும் அவனை நல்லவனாக்குவதற்காக நல் முறையிலேயே நடந்துகொள்ள வேண்டும்."............"He that humbles himself shall be preserved entire. He that bends shall be made straight. He that is empty shall be filled. He that is worn out shall be renewed. He who has little shall succeed. He who has much shall go astray.") போதித்தும் சீனர்கள் குண நலமாக அவரைப் புறத்தே யொதுக்கிவிட்டு கன்ப்யூஷியஸைப் பின்பற்றலாயினர். லாவ்—ட்ஸ்வினால் வழங்கப்பட்ட பாடங்களுள் மிக முக்கியமானது செயலடக்கம் (Inaction) ஆகும். ஒரு நாட்டையோ அல்லது ஏகாதிபத்தியத்தையோ அதன் வழியே, அதாவது செயல் முறைகள் தானே இயங்கும்படி, விட்டால் தான் அது முன்னேற்ற மடையுமென அவர் நம்பினார். ஆனால் சீனாவின் கண் காணிப்பாளர்கள் அவ்வாக்கில் பொருளேதுங் கண்டார்களில்லை யாதலால் தன்னுணர்வு, தன்னடக்கம், அன்பு, அறிவாட்சி முதலியன கொண்ட கன்ப்யூஷியன் கொள்கைகளையே (Confucian maxims) தேர்ந்தார்கள். இயன்றதாகவும், உண்மையில் நல்லதாகவும் இருந்ததால் சீனர்கள் பெருந் திறனுடையவும் பழசுவும் ஆன ஒரு மன நுட்பத் திட்டத்தை ஏற்றுக் கொண்டார்கள்.

நிற்க; ஐரோப்பிய நாடுகள் முற்றிலும் மாறுபட்டன. அவை வழங்கும் கொள்கை ஒன்றாக, பின் பற்றும் கொள்கை மற்றொன்றாகும். அவர்கள் மறைவாக்கு தூய்மை யென்பதாயிருக்க, மூலக் குறிக்கோள் மன மாறுபாட்டினாலும் அதன் வழி நிகழும் போரினாலு மடையத்தக்க பொருள் வெற்றியே யாகும். போரில் மோதுதல் தீது பயப்பதென்று சொல்லாலும், எழுத்தாலும் திறம் படக் காட்டிவிட்டு, நடை முறையில் திரும்பத் திரும்ப போர் மூட்டி, வேறெவைகளையும் விடப் போரில் வெற்றியை ஆனந்திக்கிறார்கள். ஆனால், இதற்கு மாறாக நாடு பிடிக்கும் வேட்கையற்ற சீனர்கள் அமைதியை விரும்புகிறார்கள். போரானது பிறரால் வலிய ஏவப்பட்டாலன்றி அவர்கள் போர் செய்வதில்லை. போரில் வெற்றியைவிட அவர்கள் கல்வியையும் அன்பையுமே அதிகமாக ஆனந்திக்கிறார்கள்.

சுருங்கக் கூறின், கீழ் நாடுகள் உல்லாசத்தையும் மேல் நாடுகள் அதிகாரத்தையும் நாடுகின்றன எனலாம். மேனாட்டார் அதிகாரத்தின் பொரு

ட்டு அந்நிய நாடுகளை ஆக்ரமித்து சக்திவாய்ந்த பேரோகாதிபத்தியத்தை யமைத்தும், விஞ்ஞானத்தை வளர்த்தும் வருதல் போலச் சீனர்கள் செய்வதில்லை. அதிக வேலைசெய்து உடலுக்குத் தளர் வூட்டுங் காலத்தை வேறு பல நல்ல வழிகளில் செல வழிக்கலாமென எண்ணி, வாழ்வதற்குப் போதுமானவற்றோடு அவர்கள் திருப்தி யடைகிறார்கள். அவைகளைப் பெருக்குவது வீண் வேலை யென்பது அவர்கள் எண்ணம். கடினமான வேலையையும் அதன்வழிப் பொருள் வெற்றியையும் விரும்பும் ஐரோப்பியரும் பிறரும் சீனர் தம் கொள்கைகளை விரும்புவரோ?

ஆசிரியர் ரஸ்ஸல் சோம்பலை மதித்து, ஐரோப்பியக் கைத்தொழில் மதிப்பைப் பற்றிய வினாக்களை எழுப்பத் தொடங்கியது சீனாவுக்கு விஜயம் செய்த பின்னரே. மேலைக் கைத்தொழில் நல்ல பொருள்களை உற்பத்தி செய்கிறது; சந்தேகமே யில்லை. ஆனால் கெட்ட பொருள்களையும்—அதிக அளவிலே என்றும் கூறலாம்—உண்டாக்குகிறதே? ஐரோப்பிய உற்பத்தியாளர்கள் வியக்கத்தக்க ஆற்றல் வாய்த்தவர்கள் தான். ஆனால் அவர்கள் அதைக் கப்பல்களும் மோட்டார்கார்களும் செய்வதற்கு மட்டுமன்றி, பாம்களும் துப்பாக்கிகளும் உண்டாக்குவதற்கும் உபயோகிக்கிறார்கள். அவர்களுடைய அரசியல் முறையும், போலீஸ் முறையும் மிகச் சிறந்தவை யானாலும் செய்யப்படும் வேலைகள் நன்மையும் தீமையும் கலந்த ஒரு கலப்பா யுள்ளது. இவ் வகையிலெல்லாம் சைனா கீழ்ப்பட்டதானாலும் அங்கு சுதந்திரமும், மகிழ்ச்சியும் மேல் நாடுகளி லுள்ளதைவிடவும் அதிகமா யுள்ளன.

சீனர்கள் கைத்தொழிலை அது மனிதனுக்குப் பயன்படும் நிலைகளில் மட்டும் நினைக்கிறார்கள் என்பது தெரிந்ததே. சாமான்ய அநுபவங்களைத் தன்வரை துறந்து, அதன் பொருட்டுப் பிறரையும் தாக்கும் ஒருவன், மேல் நாட்டாரின் அபிப்பிராயப்படி, அருளாளனாகின்றான். அதற்கு மாறாகச் சீனர்கள் அனுபவத்தை விரும்பி, இயற்கை உள்ள நெகிழ்ச்சிகளையும் போற்றுகிறார்கள். மேல் நாட்டார் இயற்ற முடியாத செயல் முறைகளை வகுக்க சீன நாட்டார் நடை முறையில் காண்பவற்றையே தருகிறார்கள்.

ஆனால் சீனத்திட்டம், பாதிக்கத்தக்க கேடுகளை எதிர்த் தடக்குமாறு அந் நாட்டை முன்னுக்குக் கொண்டுவர முடியாது. அந் நாட்டின் சுதந்திரத்தைப் பாழாக்குவதற்கு ஆளாகும் குறைகளுள் இது ஒன்று. ஏனெனில் உலகம் முழுவதும் சைனாவைப் போன்றே அருள் நிறைந்த தேசங்களாலேயே ஆக்கப்படவில்லை.

ஆசிரியர் ரஸ்ஸல் இவ்வாறு கன்ப்யூஷியன் திட்டத்தை அடிப்படையாகக் கொண்ட சீன நாகரிகத்தையும் மேலை நாகரிகத்தையும் ஒப்பிட்டு முடிவில் மேல் நாடுகளே முன்னேறுவதாகத் தோற்றுகின்றன என்று கூறுகிறார். கீழ் நாடு வெளிக்குப் பிற்பட்டுப் போயினும் அதுவே மகிழ்வும் சுதந்திரமும் நிரம்பப்பெற்ற நாடு என்பது அவர் கருத்து.

# அந்தக் காலம் வருமா?

(கார்த்திகேயன்)

குமுதா! அந்த இளம் பருவமே அலாதிதான்! அது வருமா இனி? நீ ஒரு விளையாட்டுப் பெண். சோலைக் கிளி போல உலாவித் திரிந்த பருவம் அது! ஆற்றங்கரையிலும் தோட்டந் துறவுகளிலும், மாடக் கூடங்களிலும் ஓடி யாடிப் பொழுதைக் கழித்தாய்! வீடும் வெளியும் ஒன்றாயிருந்த காலம் அது. பொழுது புலர்ந்ததே ரேழி மாடத்திலுள்ள விளையாட்டுச் சாமான்களுடன் நீ வெளிப்பட்டு விடுவாய். உன் தோழிகள் உன்னைச் சூழ வீதியிலோ, வெளிக்கூடத்திலோ உன் கவலையற்ற உல்லாசத் தொழில் துவங்கிவிடும். "அடி அம்மா! குமுதா!" என்று உன் அம்மா உன்னை அருந்துண்ண அழைப்பாள். அதெல்லாம் உன் விளையாட்டுச் செவியில் ஏறுமா, என்ன? பிறகு அவளே உன்னைத் தேடி வந்து "அன்னமே வாடி!" என்று கட்டிப் பிடித்து உன்னைத் தூக்கினால் நீ கால்களை உதைத்துக்கொண்டு முறுக்குவது எத்தனை அற்புதமா யிருக்கும்! அந்த மோகனப் பருவம் இனி வருமா?

* * * *

நீ வீதியில் நடந்து செல்வதே ஒரு அலாதி அழகு! இளமான் போல துள்ளித் துள்ளி ஓடுவாய்! பச்சைக் கிளி போல பறந்து பறந்து செல்வாய்! பம்பரம் போல உன்னையே சுற்றிச் சுற்றி நடப்பாய்! வீதியாச்சே என்று கூடப் பாராது உன் பவள வாய் என்னென்ன பாட்டையெல்லாமோ கொட்டிக் குவிக்கும்! உன் கோமள கரங்கள் அபிநயம் பிடிக்க, உன் தாமரைத் தாள்கள் தாளம் போடும். ஆ! இந்த ஆனந்த நாட்டியம் என் பாழுங் கண்களுக்கு எத்தகைய உன்னத காட்சியா யிருந்தது தெரியுமா? ஐயோ! இனி அந்தப் பருவம் வருமா?

* * * *

பேசும் போதும், சிரிக்கும் போதும் அந்தக் கரு விழிகளில் தான் எத்தனை திருட்டுத்தனம்! எத்தனை அசைப்பு, ஆட்டம்! எதிரே நின்று பேசும் போதே ஒரு நெளிப்பு—அதற்கொரு ஏளனப் பார்வை! தூரப் போய் நின்று ஒரு குலுக்கு!—அதற்கொரு குறும்புப் பார்வை! ஒவ்வொரு சிரிப்புக்கும், நெளிப்புக்கும், நீட்டாப்புக்கும் அந்தக் கண் சுழற்சி!—அப்பா! அந்தக் குமுதக் கருவிழிகள் தாம் உன்னிடத்தி லகப்பட்டுக் கொண்டு என்ன பாடு பட்டன?. உதட்டில் அரும்பும் நகைப்பை ஓரோர் சமயத்தில் அந்தப் பொல்லாத கருவிழிகள் அப்படியே வழிய விட்டனவே! அழுகை வந்தால் தான் என்ன லேசா? 'மடமட' வென்று பொங்கி வழியும் அத்தனைக் கண்ணீரையும் அந்தக் கள்ள விழிகள் எங்கேதான் அடக்கி வைத்துக் கொண்டிருந்தனவோ! அறியேன்! அழுகையும், சிரிப்பும் ஒரே நொடியில் மாறுமே! அந்த மாயப் பருவம் இனி வருமா?

* * * *

மாலை வேளையிலே வீதியிலே மணல் வீடு சமைத்தாய்! வீதி யாருக்குச் சொந்தம் என்ற சட்டமெல்லாம் நீ என்னத்தைக் கண்டாய்! கட்டிய வீட்டில் நீயும், மற்றக் குட்டிகளும் கொட்ட மடித்தீர்கள்! அந்த நேரம் பார்த்து அந்தப் பொல்லாத வண்டிகளும், மாடுகளும் உன் மணல்

வீட்டை இடித்துத் தகர்த்துக்கொண்டு போயின, உன் சாபத்துக்குக் கொஞ்சங்கூடப் பயப்படாமல்! போதாக்குறைக்கு உன் வயிற்றெரிச்சலைக் கொட்டிக் கொள்வது போல உன் தம்பி அந்த விஷமக்காரப் பயல் எங்கிருந்தோ வந்தான் உன் கெஞ்சலையும், கொஞ்சலையும் துளிக்கூட மதிக்காமல் 'தை-தை' என்று குதித்து இடிந்த வீட்டைத் தரைமட்டமாக்கிவிட்டான்! அப்போது பார்த்தேன் உன் குழந்தை வதனத்தில் தோன்றிய ஏமாற்றத்தை! ஆ! அந்த இளம் பருவம் இனி எப்போது வரும்?

*　*　*　*

சிரிப்பு ஒரு அழகு. வாய் விட்டு "ஹா ஹா ஹ்ஹ்" என்று ஓசையோடு சிரிப்பதில் என்ன அழகு இருக்கிறது? கொஞ்சம் வெறுப்புக்கூட ஓரோர் சமயத்தில் உண்டாகிறது. இந்த அனுபவம் என்னைப் போன்ற பெரிய மனிதனுடைய சிரிப்புக்கு மட்டுந்தான். உன் இளஞ் சிரிப்பிலே—கள்ளங் கபட மற்ற ஓசைச் சிரிப்பிலே என்ன அழகு, என்ன இனிமை? ஆனால் எல்லாவற்றையும் தூக்கி யடித்துவிடும் உன் மௌனச் சிரிப்பு! அதிலேதான் எனக்கு மட்டற்ற பித்து. மெல்லிய இதழ்களை லேசாக நெளிய விட்டு முல்லைப் பற்களைத் தோற்றுவிக்கும் அந்தப் புன்னகைக்கு ஈடாக நான் என்னத்தைச் சொல்வது! அந்தக் குறுநகையை அலங்கரிப்பதுபோல சின்னஞ் சிறு கன்னக்குழிகள் வேறு—அந்தக் களி துலங்கும் சௌந்தர முகம் இனி வருமா?

*　*　*　*

அந்த நாளில் உனக்கென்ன கவலை? 'பண்டிகை வருகிறதே! விசேஷ தினம் வந்துவிட்டதே! வீட்டில் பண்டங்கள் இல்லையே! துட்டு இல்லையே' என்றெல்லாம் உனக்கு விசாரம் ஏது? பசிக்கிறபோது ஆகாரம்—அதுகூட உனக்கு வேண்டியதில்லை. தின்பண்டம் ஏதேனும் கிடைத்துக் கொண்டிருந்தால் அதுவே போதும். விளையாடத் தோழிகளும், பண்டங்களும் வேண்டும். நிர் விசாரத்தோடு உனக்கு உல்லாசமாகப் பொழுது போய் விடும். வீதியில் போகும் வளையற்காரனையும், சோப்புக்காரனையும் கூட்டி வைத்துக்கொண்டு நீ பண்ணும் ஆட்டி கொஞ்ச நஞ்ச மல்ல தான்! அதனால் உன் பெற்றோர்க்குத் துளிகூட சலிப்பு இல்லையே! உனக்கு வாங்கிக் கொடுத்து அதனால் உன் குதூகலத்தைக் காணத் தங்களிடம் போதிய பொருள் இல்லையே என்ற ஏக்கம் அல்லவா அவர்களுக்கு! அந்தக் கவலையற்ற பருவம் இனி எப்போது வரும்?

*　*　*　*

உனக்கு அப்போது வயசு ஒன்பதுக்கு மேலில்லை. அதற்குள் நீ என்னமோ ஒரு பெரிய பெண்பிள்ளை யாய்விட்டது போலத்தான் எல்லா செயல்களும்! வீட்டைக் கூட்டிப் பெருக்கிச் சுத்தி செய்துவிடுவது போல கையில் பெரிய விளக்குமாறு ஒன்றை எடுத்துக்கொண்டு வந்து விடுவாய்! இடது கரத்தை உன் சிற்றிடையில் வைத்துக்கொண்டு உன் தாயார் கூட்டிய இடத்தையே பிரமாதமாகப் பெருக்குவாய்! நதிக்கு உன் அன்னை நீராடச் சென்றால் உடன் நீயும் சென்று ஒரு சிறு செம்பை இடையில் தாங்கி மற்ற பெண்டிரைப் போல வலக் கரத்தை வீசி வரும் நேர்மையை என்னென்பேன்! ஆ! அந்தக் காட்சியை ஒரு 'போட்டோ' எடுத்திருந்தாலும் இப்போது கண்டு மகிழலாம். இல்லையே! இனி அந்த உயரிய தோற்றத்தை என்று காண்பேன்?

# ஓர் ஐயம்? ★ (முத்து-கண்ணப்பன்)

**ப**ல வளங்களும் மலிந்த நமது தெய்வத் தமிழ் நாட்டில், இதுகாலை நம்மனோரிற் பலர் பேரூக்கமும் நிறை யார்வமுங் கொண்டு அமிழ்தினு மினிய நந்தமி ழன்னையை முன்னையினும் பன் மடங்கு சீருஞ் சிறப்புமுறச் செய்ய முனைந்து முன்வந்துள்ளனர். 'தமிழ்க் கலை' 'தமிழ் நாகரீகம்,' 'தமிழ்க் கீதம்'—எங்குந் தமிழ், என்றுந் தமிழ், எல்லாந் தமிழ் எனும் பேராவம் எம்மருங்கும் முழங்கி வானையும் பிளந்து செல்கின்றது. இஃது நம்மனைவரையுங் கரைகாணா ஆனந்தக் கடலுள் மூழ்கடித்திருக்கின்றதென்பதை விவரிக்கவேண்டா.

எனினும் இவ்வன்பர்களுள் ஒரு சிலர்பாற் சிறு குறை யொன்றுளதென்பது விசனிக்கத்தக்க தொன்றேயாம்.

அக்குறை யென்னை யெனின், அன்னார் தங்கள் பெயரினை யெழுதுங்கால் பெயருக்கு முன்னெழுதும் எழுத்துக்கள் (Initials) ஆங்கில வெழுத்துக்களாக விருப்பதேயாம்.

உதாரணமாக டி. கே. சிதம்பரநாத முதலியார், டி. எஸ். சொக்கலிங்கம் பிள்ளை, எஸ். சோமசுந்தர பாரதியார், எஸ். வையாபுரிப் பிள்ளை முதலியனவும் இன்ன பிறவும்.

நந்தமிழ் மொழி வளர்ச்சிக்கு அரும்பாடுபட்டுவரும் செந்தமிழ்ச் செல்வர் பலர் இங்ஙனம் எழுத நேர்ந்த காரணம் என்ன வென்பதுதான் புலனாகா நிற்கின்றது. இவர்கள் "கணக்கன் கணக்கறிவான் தன் கணக்கைத் தானறியான்" எனுந் தொன் மொழிக்கொப்ப ஒருகால் இந்தச் சிறு விஷயத்துள் தங்கள் கவனத்தைச் செலுத்தாதுள்ளனரோ! அன்றேல் அறிந்தே அவ்வண்ணம் வரைந்து வருகின்றனரோ வென்பதுதான் ஐயம்!!! அறிந்தேதான் அம்முறையைத் தொடர்கின்றன ரெனின், அதன் காரணர்தான் யாதோ?

நம் நாட்டின் ஒரு புடையில் வதியும் வங்காளச் சோதரரும், ஆங்கிலரும், இன்ன பிற மொழியினரும் தத்தம் தாய் மொழிபால் கொண்டுள்ள பற்றை—ஆர்வத்தை—மோகத்தை என்னென்றுரைப்பது! உயிரினுஞ் சாலச் சிறப்புடைத்தாகவன்றோ கருதுகின்றனர்! அத்தன்மையாலன்றோ அம்மொழிகள் தலை சிறந்து நிற்கின்றன!

உண்மையான மொழிப் பற்றுக்கொண்ட அவர்களில் எம்மொழியினரேனுந் தம் பெயரினை எழுதுங்காலை முன்னெழுத்துக்களை அந்நிய மொழியிற் பொறித்தலைப் பெருமையாய்க் கொள்கின்றனரோ? கொள்ள விழைகின்றனரோ?

நம்மின் தமிழ் மொழியைக் கற்றுப் புலமை தாங்கிய எந்த ஆங்கில மொழியினன் அல்லது பிறமொழியினன் முன்னெழுத்தைத் தமிழிலும், பெயரை ஆங்கிலத்து அல்லது சம்பந்தப்பட்ட பிறமொழியிலும் (உதாரணமாக S B. James என்பதை எஸ். பி. James அல்லது ச. பெ. James

(365-ம் பக்கம் பார்க்க.)

# ராணி சம்யுக்தா



(பி. என். வைத்தியநாதசுவாமி பி. எஸ். ஸி.,)



**ப**கைமை கொடியது. அதற் கிடங் கொடுக்கலாகாது. அத் தீயை வளர்ப்பவன் அதிலேயே அழிவன். பகைவனை வெல்ல அன்னியனைத் துணைகொள்கிறான். அம்மம்ம! இதிலும் கொடியதுண்டோ! அவ்வன்னியனால் இருவருக்குமே நாசம் வருகிறது.

ஜயசந்திரன் பிருதிவிராஜ்மேல் பகைமை கொண்டான். பகைமை, கேவலம் அறியாமல் வரும் பகைமை அயோத்தி அரசனை தேசத்துரோகியாக்கியது. அம்மட்டோ! பாவி நாட்டைக் காட்டிக் கொடுத்தான்; அன்னியனுக்கு இட மளித்தான்; நமக்கெல்லாம் தீராவிலங்கைப் பூட்டி விட்டான்.

இளவரசி சம்யுக்தாவின் சுயம்வர தினம். அயோத்தியிலுள்ள கானௌஜ் பட்டினம் அழகு கொப்பளித்தது. கல்யாண மண்டபம் கண்களைக் கவர்ந்தது. எல்லா தேசத்தரசர்களும் அலங்காரப் புருஷராய் வீற்றிருந்தார்கள். ஆனால் டில்லி மன்னன் பிருதிவிராஜ் அங்கில்லை.

ஜயசந்திரன் மகாவீரன்; ஆனால், பிருதிவிராஜனும் அவனுக்கு இளைத்தவனல்ல. சுயம் வரத்தைக் கேட்ட அரசர்களெல்லாம் பயந்தோடி வந்தார்கள். வராத பிருதிவிராஜை இழிவுப்படுத்த எண்ணினான் அயோத்தி மன்னன். டில்லி அரசனைப்போல் மண்சிலை யொன்று செய்யப்பட்டது. வேலைக்காரன் உடுப்பைப் போட்டார்கள். மண்டபத்தின் வாசற்படியில் சிலையும் வைக்கப்பட்டது.

மன்னன் மகள் தோழியர்களோடு மண்டபத்தில் புகுந்தாள். கூடி விருந்த அரசர்களெல்லாம் இஷ்ட தேவதைகளைத் தியானம் செய்தார்கள். யாருக்கு அதிர்ஷ்டமோ வென்று மனம் துடித்தார்கள். நவரத்தினங்கள் வைத்திழைத்த மாலை யொன்று அவளழகிய கழுத்தை அலங்கரித்தது.

உனக்கிஷ்டமான அரசனுக்கு மாலையிடு என்றனன் ஜயசந்திரன். மன்னர்களை யெல்லாம் பார்த்துக்கொண்டே அன்னம்போல் நடந்து போனாள் இளவரசி. வாசற்படியை அடைந்தாள். சட்டென்று மண்சிலைக்கு மாலை யிட்டாள். எல்லோரும் திடுக்கிட்டனர். மண்டபத்தில் குழப்ப மேற்பட்டது. மகளைக் கைதி செய்யும்படி மன்னன் உத்தரவிட்டான். அவமானம் அவனைப் பிடித்தாட்டியது.

தன் குற்ற முணர்கிற வரையில் கடும் சிறைவாச மென்றான் தந்தை. மகளும் மனோதைரியத்தை விடவில்லை. ஆனால், கணவன் வருகைக்காக சிறிது கலங்கினாள்.

விஷய மறிந்தான் பிருதிவிராஜ்; கோபங் கொண்டான்: காதலியைக் காக்கப் புறப்பட்டான். போர் முரசு முழங்கியது. கடைசியில் ஜயசந்திரன் தோல்வி யடைந்தான். மனைவியோடு ஜயபேரிகை சப்திக்க பிருதிவிராஜ் டில்லியில் புகுந்தான். அயோத்தி அரசனின் மனம் பதறியது. பாவி! சொந்த மருமகனையே பழிவாங்க முடிவு செய்தான்.

மகமது கோரி இந்தியாவில் புகுந்து சூரையாடினான். கோயில்கள் இடிக்கப்பட்டன; குளங் குட்டைகள் தரை மட்டமாயின; ஸ்திரீகள் கற்பை இழந்தனர். மானத்தைக் காப்பாற்ற பிருதிவிராஜ் முன் வந்தான். மற்ற அரசர்களை துணைக் கழைத்தான். ஜயசந்திரன் தவிர மற்றவர்களெல்லாம் ஒன்று சேர்ந்தனர். தாய்நாட்டின் மானம் பெரிதல்லவா! திரொளரி என்ற விடத்தில் யுத்தம் நடந்தது. முடிவில் மகமதுகோரி தோல்வி யடைந்தோடினான்.

அயோத்தி மன்னன் மானத்தை மறந்தான். மருமகனின் வெற்றியைக் கண்டு மனம் புழுங்கினான். தாய்நாட்டின் பணி கண்ணுக்குத் தோன்றவில்லை. பகைமைத்தீ மனதில் கொழுந்துவிட் டெரிந்தது. அன்னியனை மீண்டு மழைத்தான். உதவி புரிவதாக வாக்களித்தான். மகமதிய அரசன் சந்தர்ப்பத்தையே எதிர்பார்த்தான். சிற்றரசர்களும் பிருதிவிராஜ் பக்கம் சேராமலிருக்க, குழப்பங்கள் செய்யப்பட்டன.

மூவேந்தரும் யுத்தகோலம் பூண்டனர். மகமது கோரி தனது கூடாரத்தில் சந்தோஷமாக விருந்தான். ஜயம் தன்னுடையதென்று நம்பினான். அதிக ஆதரவில்லையென்பதை பிருதிவிராஜ் உணர்ந்தான். இருந்தும் மனம் கலங்கவில்லை. க்ஷத்திரிய தர்மத்தைக் கைவிட்டானில்லை. தைரியதேவி அவன் கூடாரத்தில் தாண்டவமாடினாள். மானத்தை விற்ற ஜயசந்திரன் மனம் சந்தோஷித்தது. தாய் நாட்டின் சிறப்பு குலையப் போவதை பாவி அறியவில்லை. பகைவன், தனது மருமகனை அழிந்துவிடுவானென்று ஆனந்தித்தான்.

தூதுவன் கோலம் பூண்டாள் ராணி சம்யுக்தா. தந்தையின் கூடாரத்தை யடைந்தாள். பெற்ற துரோகியின் காலில் விழுந்தாள். மன்னிப்பு பெறுவதற்கல்ல வீர இந்தியப்பெண்; உடம்பிலோடியது அசல் க்ஷத்திரிய ரத்தம்,—அப்படிக்கிருக்க மன்னிப்பு கேட்பாளா! தன்னெதிரியை வெல்ல தந்தையின் ஆசிர்வாதத்தை வேண்டினாள். தேசத்துரோகியின் மன மிரங்கவில்லை. "இதற்கெல்லாம் நீதான் காரணம்; காரியம் முதிர்ந்துவிட்டது; பேசாமல் போ" என்றான் குளிர்ச்சியாக. காட்டிற்காக அரசி வாதாடினாள். தேசத்தைக் காட்டிக் கொடுக்குமுன் தன்னைக் கொன்று விடும்படி வேண்டினாள்.

இந்தியாவை சனியன் தொடும் நேரம். க்ஷத்திரிய குலத்துக்கே அழிவு வரும் காலம். கடவுளும் கண்மூடி யிருந்தான் போலும்! ஒன்றும் பயனேற்படவில்லை. சம்யுக்தா தன் கூடாரத்தை யடைந்தாள். புருஷனின் பாதங்களைப் பணிந்து விடை பெற்றாள். அவள் நோக்கம் அரசாங்கத்திலுள்ள பெண்களின் மானத்தைக் காப்பதே.

கடுமையான போர் மூண்டது. சம்யுக்தா டில்லிப் பெண்களோடு கடும் தவம் செய்தாள். எல்லோரும் மன்னன் வெற்றிக்காக வேண்டிக் கொண்டனர். கருணைவள்ளல் கண் திறக்கவில்லை. பிருதிவிராஜின் தலை சாய்ந்தது. கடைசி க்ஷத்திரியன் வரையில் கத்தி முனையில் மாண்டான்.

மகளைக் காண ஜயசந்திரன் விரைந்தோடினான். பாவியின் முன் பத்தினிப்பெண் தோன்றுவாளா! தேசத்துரோகியின் முன் நாட்டின் திலகம் வருவாளா! தீ, பரிசுத்தமான தீயிலிறங்கி விட்டாள். டில்லியில் எங்கும் நெருப்புக்குழிகள், நாயகனை இழந்த நங்கைகள் வேகும் வாசனை. ஒரு பெண்ணாவது உயிரோடில்லை. மானத்தை விற்ற மன்னனின் மனம் பதறியது. கடவுள் அவனைத் தண்டிக்காமல் விடவில்லை. அன்னியனே—அந்தப் பழைய நண்பனே—யாருக்கு நாட்டின் மானத்தையும் குலத்தின் சிறப்பையும் விலை கூறினானோ அதே மகமது கோரியே—அடுத்த வருஷமே ஜயசந்திரனைப் போரில் வென்றான்.

பகைமை! இரு அரசர்கட்கும் பகைமை மூண்டது. அதன் முடிவென்ன? அன்னிய ஆதிக்கம் புனித பூமியில் புகுந்தது. அம்மட்டோ! நாமெல்லாம் இன்றைக்கும் அடிமையாக விருக்க அஸ்திவாரக்கல் போடப்பட்டது.

---

## ஓர் ஐயம்?

(362-ம் பக்கத் தொடர்ச்சி.)

என்பது போல) பொதிக்க விழைந்துளான்? அங்ஙனஞ் செய்வானாயின் அவனை அம் மொழி யார்வல் கொண்டார் 'பதர்' எனத் தூற்றி எண்ணி நகை யாடாரோ?

நம் மொழி யன்பர்கள், மொழிப் பற்றிலும் ஆர்வத்திலும் எந்த விதத்திலும் அந்நிய மொழி யன்பர்க்குக் குறைந்தவ ரல்லர் என்பதே துணிவான உள்ளக் கிடக்கை. எம் மொழியுங் காணாத தனிப்பெருஞ் சிறப்பை நம் மொழி காண வேண்டு மெனத் தோள் கொட்டி முன்னிற்கும் நம தன்பர்கள் இங்ஙனம் எழுதத் துணியின் றன்மையைக் "குறைபாடு" எனக் கூறுதல் தவறாங் கொல்? குறை யன்றென அவ்வன்பர்கள் கூறின் 'அந்நிய மொழியார்க்கு மொழிப் பற்றிலும் ஆர்வத்திலும் பின்னடைந்தவர் என்பது கூறாது விளங்கும் உண்மை யன்றோ?

நெடு நாளாய்ப் பலர் நெஞ்சத்தும் புகுந்து கிடக்கும் இவ் வையத்தை அவ் வன்பர்கள் நமது 'ஆனந்தன்' மூலமோ அன்றி வேறெவ்வகையிலோ நீக்கின் அஃதும் தங்கள் அரிய தமிழ்த் தொண்டின் ஒரு பகுதியா மென்பதே எனது பணிவான விண்ணப்பம்.

# மானிட வாழ்வு

(M. M. பாஸ்கரன்)

உலகிலுள்ள சகல ஜீவராசிகளையும் விட மானிடர்க்கு நற் புத்தியும், ஞானமும் கொடுக்கப்பட் டிருக்கிறது. ஆதலால்-மனிதர்களாகிய நாம் படித்தாலுஞ் சரி, படிக்காவிட்டாலுஞ் சரி; நம் வாழ்வு சரிவர நடக்க வேண்டுமென எண்ணுகிறோம். ஆனல்—அப் பாழும் 'ஆசை' குறுக்கிட்டு, நமக்கு சில சமயங்களில் ஏமாற்றத்தை யளிக்கிறது.

சில வேதாந்திகள்......"பூமியின் கண் நிலவு மின்பமெலாம் வெறும் மாயை. ஏனெனில்—கடைசியில் நம் பெரியோர்க ளிருக்கு மிடத்திற்கு தான் நாம் போய் சேருகிறோம்"—என்று கூறுகிறார்கள்.

இன்னுஞ் சில பற்றற்றவர்கள், "இன்பமும் வேண்டாம், துன்பமும் வேண்டாம், யாம் வேண்டுவது அப் பரம்பொருள் ஒன்றே"—என்ற வண்ணம் சன்னியாசம் பூணுவார்கள்.

*　　*　　*　　*

ஆனல்,......நானென்னமோ—அப்படி யெல்லாம் நடக்கப் போவதில்லை. எல்லோரும் உலகத்தை வெறுத்துப் போய் விட்டால்......அதிலுள்ள இன்பத்தை அனுபவிப்பது யார்......? என்பது என் கொள்கை.

*　　*　　*　　*

ஒரு நாள் சாயரக்ஷை. காதலரின் மனதில் இன்ப மூட்டும் நேரம். நாரிமணிகள் தங்களை நன்கு அலங்கரித்துக் கொள்ளும் காலம். அலுத்துப் போய் கிளார்க்குகள் ஆபீஸினின்றும் வெளியேறும் சமயம். காபி வழக்கக்காரர்கள் ஹோட்டல்களில் புகும் நேரம்.

நானும் மட மடவென 'ராமா கபே'க்குள் புகுந்தேன். ஒரு அல்வாவையும், ஜிலேபியையும் உள்ளே தள்ளிவிட்டு, ஒரு கப் ஆரஞ்சு கிரஷ்ஷை அவைகளுக்காக தாரை வார்த்தேன்.

அவ்வமயம் மிக இனிமையான வானொலி கீதம் எனக்குக் கேட்டது. "மானிட வாழ்வு பெரும் ஆனந்தம்; அதை நினைப்பார் யாருமில்லை," என்ற வார்த்தைகள் காதினுள் புகுந்து என் மனதில் ஊடுருவியது.

கிரஷ்ஷை குழாயின் வழியாய் உறிஞ்சியபடி "அழகிற்கே முதல் ஸ்தானத்தை வகிக்கப்பெற்ற ஒரு இள நங்கையை மணம் புரிந்துகொண்டு, நாம் ஏன் வாழ்வின் சுகத்தை கொஞ்சம் சுவைக்கக் கூடாது?......அதிலும் அவள் கொஞ்சம் பணக்காரியா யிருந்தால்......?" என எண்ணியபடி ஆனந்தத்தில் மூழ்கினேன்.

ஆனல், பாழாய்ப் போன துரதிர்ஷ்டம் என்னை பதினைந்து ரூபாய் கிளார்க்காகத்தானே ஆக்கி யிருந்தது.

*　　*　　*　　*

ஹோட்டலி லிருந்து, தம்பிடி 'பீடா'வை வாயில் ஒதுக்கிய வண்ணம் ஈவினிங் பஜார் வழியாய் ஹாயாக வந்தேன். வரும் போதே என் கண்களை நான்கு திசையிலும் கடிவாள மின்றி ஓடவிட்டேன்.

*　　*　　*　　*

ஒரு மாடியில் தலையைக் கோதிய வண்ணம் ஒரு பெண்மணி நிற்பதைக் கவனித்தேன். மாடிக்கு எதிரே நான் நின்றபடி நாலுக்காக அப்பாவையை நோக்கினேன். அதிர்ஷ்டவசமாய் அவளும் என்னை நோக்கினாள்.—சில துஷ்டப் பெண்களைப் போல அவள் உள்ளே ஓடிவிடவில்லையென்பதை நேயர்கள் அறிய வேண்டும்.

என் கண்கள் எனக்குத் தெரியாமல் இன்னும் ஓடிக்கொண்டே இருந்தது. என்னய்யா.........ஒருவன் கண்—அவனுக்குத் தெரியாமல் ஓடிவிடுமா?......அது என்னமோ!—எனக்கு அப்படித்தான் நேர்ந்தது.

அவளைப் பார்த்தால் கொஞ்சம் பணப் பசையுள்ளவளாய்த் தோன்றியது. அழகோ......ரதியைப் பழிக்கும் எழில். இன்னும் அவள் என்னையே கவனித்தாள். இதைப் பார்த்த எந்த வாலிபனுக்குத்தான் காம உணர்ச்சி தோன்றாது? எனினும் எனக்குத் தோன்றிய உணர்ச்சி—காமமல்ல—ஆனால் தெய்வீகக் காதல்—என எதோ என் மனதில் கூறியது.

* * * *

காரொன்று வேகமாய் வந்தது. என் குயில் உடனே உள்ளே ஓடிவிட்டது. ஹார்ன் சப்தம் என் நிலையைக் குலைத்தது. எங்களின் இன்பத்தைக் கலைத்த அக் காரை வெறுப்போடு பார்த்தேன்.

ஆ! என்ன ஆச்சரியம்!!! அதிலிருந்து என் ஆபீஸ் மானேஜர் இறங்கி உள்ளே சென்றார். "அடடா......மானேஜர் தானா அவள் தந்தை—நாம் இவளை மணம் புரிந்து கொண்டால் கடைசியில் நாமே மானேஜராகி விடலாமே?......" என்று மனக் கோட்டை கட்டியபடியே வீடு நோக்கி புறப்பட்டேன்.

* * * *

மறுநாள் மார்க்கெட்டிற்கு சாமான்கள் வாங்கிவர அவள் வீதிவழியே சென்றேன். அவள் வீட்டின் வாயிலருகே நான் வந்ததும் ஒரு கடிதம் என் முன் விழுந்தது.

சுற்று முற்றும் அச்சத்துடன் பார்த்து அதைச் சட்டென எடுத்து பையினுள் திணித்துக்கொண்டு வேகமாய் நடையைக் கட்டினேன்.

* * * *

உள்ளத்தில் பொங்கும் ஆவலைத் தீர்க்க பரக்க பரக்க கவரைத் திறந்தேன். அதில் 'காதல, உங்களைப் பார்த்ததும் எனக்கோர் நோயுண்டாயிற்று. அதற்கு தக்க மருந்து தங்கள் பால் தங்கியுளது. கிருபை செய்ய வேண்டும்.

இப்படிக்கு,
'ஸாஸா.'

* * * *

ஆழ மிக்க ஆழியில் அமிழ்ந்தி அவதிப்படும் அகழிபோல் அல்லலுற்றிருந்த அடியேனுக்கு உடைந்து உருவழிந்த ஓர் படகைப் போல அக் கடிதம் ஒருவித ஆறுதலை யளித்தது. அதையே துணையாகக் கொண்டு, கடைசியில் 'ஒரு வழியாய்'—அவளுடன் ரகசியமாய் குலாவவும் ஆரம்பித்தேன்.

ஒரு நாள் நான் ஸாஸாவைச் சந்திக்க முடியாமல் போயிற்று. "அசந்தர்ப்பத்தால் இன்று வர முடியவில்லை. என்றும் உன்னை மறவேன். உன்

காதலன் M. M. K."—என்று எழுதி அதை ஒரு பையன் மூலம் அவ ளுக்கு அனுப்பினேன்.

*    *    *    *

என்ன இருந்தாலும் பெண் புத்தி-பின் புத்தி தானே ஸரஸா, அக் கடிதத்தை ஒரு புஸ்தகத்தினுள் வைத்து பத்திரப்படுத்தி யிருந்தாள். அவள் அறைக்கு பொழுது போக்குக்காக வந்த அவள் தந்தை என் மானேஜர்—அப் புஸ்தகத்தை எடுத்துப் பிரித்தார்.

"ஐயோ! ஆண்டவனே!! என் கடித மடங்கிய புஸ்தகந்தானா...அவ ருக்கு அகப்பட வேண்டும்......"

ஆசாமி பெருத்த சந்தேகப் புலி. பின் இல்லாமலா......ஐந்து லக்ஷம் சேர்த்திருக்கிறார். கடிதத்தைக் கண்டதும் பெருத்த சந்தேகம் அவரது மூளையில் புகுந்துகொண்டு தன் வேலையை ஆரம்பிக்கலாயிற்று. தன் மகள் வருவதற்குள் அதைப் பத்திரப் படுத்திக்கொண்டு அறையிலிருந்து வெளிக் கிளம்பி விட்டார் அப்புலி.

*    *    *    *

திங்கட்கிழமை. வாரத்தின் முதல் நாள். ஆபீஸுக்குச் சென்று வழக்கம் போல் அச் சனி பிடித்த கட்டுகளில் மனதைச் செலுத்தினேன்.

"சார்......உங்களை மானேசர் கூப்பிடுகிறார்"......என ஒரு பியூன் அழைத்தான்.

'அடடா......! அதிர்ஷ்டம் என்னை நோக்கி புன் முறுவல் செய் கிறதோ.........!!' என் றெண்ணியபடி விரைப்பாய் மானேஜரின் தனி அறையை யடைந்தேன்.

*    *    *    *

"Get out Idiot. No Place for you here"......என்று அப் பிரகஸ்பதி நரசிம்மம் போல கூவிற்று. தலையில் கை வைத்தபடியே வெளி யேறினேன்.

"காரணம் என்னடா......" என ப்யூனைக் கேட்டேன்.

"மானேசர், உம்ம கட்டை எடுத்துப் பார்த்தார். சட்டுன்னு அவங்க பைலே யிருந்து ஒரு கடுதாசியையும் எடுத்துப் பாத்தாங்க. அப்பரம்...... உங்களைக் கூப்பிடச் சொன்னாங்க......" என்றான்.

*    *    *    *

பிறகு தான் எனக்கு 'மானிட வாழ்வின்' மர்மந் தெரிந்தது. என்ன இருந்தாலும் கைக்கு எட்டியது வாய்க்கு எட்ட வில்லையே யென ஏங்கி னேன்.

மானிட வாழ்வின் இன்பத்தை நான் நாடப் போக, துன்ப மன்றோ வலிய வந்தது. ஆம்......விதியின் விளையாட்டு......!

தற்பொழுது நான் "வேலை காலியில்லை"—என்ற போர்டுகளைப் பார்க்கும் பாக்கியம் பெற்ற கோஷ்டிகளில் ஒருவனா யிருக்கிறேன்.

ஹூம்......எப்படி ஐயா என் "மானிட வாழ்வு?"

*    *    *    *

(இது ஓர் உண்மை வாழ்க்கை நிகழ்ச்சியை யொட்டி எழுதப்பட்டது.)

# டென்னிஸன் பிரபு

(தா. மா. அப்பாவு.)



நம்முடைய தமிழ்நாட்டுக்கவிகளின் வாழ்க்கையைப் படிக்க முற்பட்டால், அவர்களுக்கே யுரித்தான 'வறியோன்' என்ற பட்டம் கட்டியங் கூறிக்கொண்டு முன்னேவந்து நிற்கிறது. மேல்நாட்டுக் கவிகளும் இவ்விதிக்கு விலக்கல்ல. வேலையில்லாமல் அலைந்து நாடு நாடாய்ச் சுற்றியபின்னரே கவியெழுதி காலத்தைப் போக்கினர். அவர்களுக்குள்ளே சிலர் பிரபு பட்டம் பெற்று மணிவாழ்வு நடத்தியுள்ளனர் என்பதையறிய நம் மனம் குளிர்கின்றது. இவர்களி லொருவரான ஆல்பிரெட் டென்னிஸன் பிரபு 'ஆங்கிலக்கரைக்கும் நாட்டிற்கும், ஆங்கில இலக்கியத்திற்கும், நம்பிக்கைக்கும், ஆங்கில வாழ்வுக்கும் ஆராய்ச்சிக்கும் குணத்திற்கும் கவியாக' விளங்கியதைப்பற்றி நாம் சிறிது தெரிந்து கொள்வது நலம்.

விக்டோரியா காலத்து கவிகளில் முதல்வராகவும், மக்களின் நன் மதிப்பைப் பெற்றவராகவும், இணையற்ற நாட்டுக்கவி (poet laureate) யாகவும் டென்னிஸன் ஐந்தாண்டுகள் வாழ்ந்தார். நாட்டுப்பற்றிலும், இன அன்பிலும், அரசியற் கொள்கைகளிலும், நம்பிக்கைகளிலும், நடையிலும், தோற்றத்திலும், வாழ்க்கையிலும் அவர் ஓர் ஆங்கிலேயரை, அதுவும் விக்டோரியா காலத்து ஆங்கிலேயனாகவே நடந்துகொண்டார். 'ஓர் அரசனைப்பற்றிய வர்ணனை' (The Idylls of a King) என்ற தனது நீண்ட கவிதையிலே தன்னுடைய நாட்டின் வர்ணனைகளினால், நாட்டு மக்களின் அன்பைக் கவருகிறார். அவர் அக்காலத்திய மக்களுடன் நெருங்கிப் பழகி யுணர்ந்தவற்றைத் தனது கவிதைகளிலே கூறியிருப்பதால், அக்காலத்திய பிரதிநிதியாக நம்மிடையே விளங்குகிறார். அவருடைய கவிதைகளின் பெரும்பாலான நாட்டுப்பற்றை யூட்டுவன. 'நாட்டின் உணர்வைத் தட்டியெழுப்பக்கூடிய பாட்டுக்களை யாத்தலே ஓர் பெரிய தேசத்தொண்டாகும்' என்று அவர் நம்பியிருக்கவேண்டும்.

இங்கிலாந்திலுள்ள ஸாமர்ஸ்பரி என்னும் நகரிலிருந்த மடாதிபதியொருவருக்கு நான்காவது மகனாக, 1809-ஆம் ஆண்டு பிறந்தார். 'பழய அமைதியின் சின்னமான' அம்மடத்தைப்பற்றி 'கலைக்கோவில்' (Palace of Art) என்ற அவரது கவிதையிலே கூறப்பட்டிருக்கிறது. அவருடைய அறிவுத்தோற்றம், அவரை இயற்கையின் அழகிற்கும் உண்மைகளுக்கும் அறிமுகப்படுத்தியது. இதனால் அவருடைய நுண்ணிய அறிவுத்திறன் விசாலமாகியது. தனது ஐந்தாம் வயதிலே, அவர் வெண் வெளியின் விளக்கங்களை (Voice of the wind) கேட்க முடிந்தது.

அவரது ஆரம்பக் கல்வி, வீட்டிலேயும், அவ்வூர் இலக்கணப் பள்ளியிலும் கிடைத்தது. 1828-ம் ஆண்டு கேம்பிரிட்ஜிலுள்ள டிரினிடி கல்லூரிக்கு (Trinity College) அனுப்பப்பட்டார். அங்கு அவர் தன் வாழ்நாளில் நல்ல துணைவனாக இருந்த ஆர்தர் ஆலம் (Arthur Hallam) என்பவரை

நண்பராகப் பெற்றார். இன்னும் பல முன்னேற்ற நோக்கங் கொண்ட வாலிபர்களும் நண்பர்களாக அமைந்தனர்.

1827-ஆம் ஆண்டு, அவர் தம்முடைய சகோதரனுடன் சேர்ந்தியற்றிய 'இரண்டு சகோதரர்களின் கவிதைகள்' வெளிவந்தது. இரண்டாண்டுகளுக்குப் பின்னர் 'டிம்பக்டு' என்னும் கவிதை யியற்றியதற்காக உப அத்யக்ஷகரின் பரிசு பெற்றார். 1830-ஆம் ஆண்டு, அதாவது கல்லூரியில் படித்துக்கொண் டிருக்கும்போதே 'பாடற்குரிய கவிதைகள்' (Poems Chiefly Lyrical) பிரசுரமாகியது. 'ஒயினன்', 'தாமரை தின்னிகள்' முதலியன அடங்கிய 'கவிதைகள்' 1832-ல் வெளிவந்தன. இந்த இணையற்ற கவிதைகள், மக்களால் விரும்பப்பட்டு திரும்பவும் திரும்பவும் அச்சிடவேண்டி நேரிட்டது. இந்தக் காலத்தில் இவருடைய கவிதைகளைப்பற்றிய அபிப்பிராயங்கள் (criticism) வெளிவந்தன. லீஹண்ட் அவற்றை மனமார வரவேற்றார். வில்ஸனும் லாக் ஹார்ட்டும் அவற்றின் குழந்தைத்தன்மையையும் கலைத்தன்மையையும் தாக்கலாயினர்.

இந்த தாக்குதல் அவர் மனத்தைப் புண்படுத்தவே, அந்த இளங்கவி, பத்தாண்டுகள் கவிதையியற்றாமல் இருந்தார். இந்தக் காலத்தை வீணாக்காமல் அவரைச் சுற்றி பெருகி வந்த ராசியல் விஞ்ஞான நுணுக்கங்களைக் கூர்மையாக ஆய்ந்து வந்தார். அப்போது அவருக்கு நண்பனாக அகப்பட்ட கார்லைலின் தூண்டுதலினாலே, சமூகம், தத்துவஞானம் முதலியவற்றிலும் அவர் மனம் செல்லலாயிற்று. 1833-ஆம் ஆண்டு அவருடைய அருமையான நண்பன் ஹாலம் இறந்துவிட்டதினாலே அவர் மனம் குழப்பமடைந்து பின்னர் வாழ்க்கையைப் பற்றியும், விதியைப் பற்றியும் சிந்தித்து வரலானார்.

'ஆர்தரின் இறப்பு' முதலியன அடங்கிய 'கவிதைகள்' (Poems) 1842-ல் வெளிவந்தது. அதனுடைய நல்ல நடையும் அபூர்வமான அழகும் அவருக்கு கவியென்ற பட்டத்தை நிலைக்கச் செய்தது. அக்காலத்திய நாட்டுக்கவியான வோர்ட்ஸ்வொர்த் சொன்னார். "இன்றையக் கவிகள் யாவரிலும் இவர்தான் முதல்வர் என்று முடிவுசெய்யலாம்." பின்னர் வந்த 'இளவரசி'யிலே பெண்களின் சமூக, கல்விப் பிரச்சினைகளைப் பற்றிய அவருடைய எண்ணங்களை வெளியிட்டு இருந்தகர். வோர்ட்ஸ்வொர்த் 1850-ல் இறக்கவே, இவர் நல்ல வருமானம் தரும் நாட்டுக்கவியானார். அதே ஆண்டிலேயே எமிலி செல்வுட் என்ற தனது இளவயதுக் காதலியை மணந்துகொண்டார்.

ஹாலத்தை இழந்ததனாலாய துக்கங்களையும் மன எழுச்சிகளையும் 'ஞாபகச்சின்னம்' என்னும் கவிதையிலே குறித்திருக்கிறார். வெல்லிங்டன் பிரபுவின் இறப்பைப்பற்றியும் கிரிமியா போரைப்பற்றியும், 'ஓடே,' 'மாட்' (Maud), 'விளக்கின் ஒளி' (Charges of the Light) முதலிய கவிகளியற்றினார். தனது அறுபத்தாறும் வயதிலே 'மேரி அரசி', 'ஹரோல்டு,' 'பெக்கட்' முதலிய நாடகங்களை இயற்ற முயன்றார். ஆனால் அவர் அக்காலத்திய நாடகமேடையின் உண்மை நிலைமையை யறியாமையாலே அவற்றில் தோல்வியடைந்தார். கடைசியாக வந்த 'பழங்காலத் துறவி', 'அக்பரின் கனவு' முதலிய கவிகளும் சொல்வன்மையும், அழகுத்

திரட்சியும் உடையனவாயிருந்தன. டென்னிஸனின் வாழ்க்கை அமைதி நிறைந்தது. அவருடைய வாழ்க்கையிலே சருக்குதல்கள் (Events) கிடையாது. அவருடைய மணத்திற்குப்பின் நடந்த குறிக்கத்தக்க சம்பவம், அவருக்கு 1884-ஆம் ஆண்டு உயர்குடி மகனுர் (Peer) ஆனதுதான். 1892-ஆம் ஆண்டு அவர் இறந்துபோனுர்.

"டென்னிஸன் தாய்நாட்டின்மீது ஆழ்ந்த பற்றுக்கொண்டிருந்தார். சரித்திரத்திற் காணும் வீரச்செயல்கள் அவருக்கு வியப்பைத்தரும். அவ்வக் காலங்களில் வாழ்ந்த வீரர்களின், உறுதியையும் வீரத்தையும் அணிகலனுகக் கொண்ட வாழ்க்கை வரலாறுகளைக் கண்டு அவர் மகிழ்வதுண்டு. அவர் தந்நாட்டுக்கான கடமையைச் செய்ய, எப்பொழுதும் காத்திருந்தார். அவற்றைப் போற்றத்தக்க விதத்திலே செய்து முடித்திருக்கிறுர்." அவர் தமது நாட்டுப் பற்றை, 'லக்னே பாதுகாப்பு', 'பழிக்குப் பழி', முதலிய இன்னிசைக் கீதங்களிலே காட்டியிருக்கிறுர். வெல்லிங்டன் இறந்ததற்காக எழுதிய பாட்டிலே கூறுகிறுர்.

"நம் சாம்ராஜ்யத்தின் அழுகையோடு அந்தப் பெரிய வீரனைப் புதையுங்கள். நம் வலிமைமிக்க இனத்தின் வருத்தத்திற்கிடையிலே நாம் அந்தப் பெரிய மனிதனைப் புதைக்கலாம். தலைவர்கள் இறக்கும்போதும் வீரர்கள் மடியும்போதும், அழுகை யோசை ஒவ்வொரு மாளிகையையும் ஒவ்வொரு குடிசையையும் இருட்டச் செய்கின்றது. நம்முடைய போற்றுதலுக்குரிய அம்மனிதனை நாம் எங்கே வைக்கப்போகிறேம்? அவர் எந்த மக்களுக்காகப் பாடுபட்டாரோ, எந்த மக்களுக்காகப் போரிட்டாரோ, அவர்களது ஓசை, அவரது எலும்புக் கூட்டைச் சுற்றி என்றும் ஒலி செய்யட்டும்."

"ஓரினத்தின் குரல்! நாம் முரட்டுக்கூட்டத்தாராலும் அநீதியான அரசாங்கத்தாலும், குழப்பமடைந்தபோதிலும் நாம் எல்லோரும் ஓரினம். நம்மை இத்தீவுக்கு அழைத்துவந்தவனுக்கு நன்றி செலுத்துங்கள். நாம் சிறுங் கடலிலிருந்தும், பாயும் புயற்காற்றிலிருந்தும் தப்பி, பிரிட்டனில் வாழ வைத்தவனுக்கு நன்றி செலுத்துங்கள். இதை நம்முடையதாக்க போரிட்ட பெரியோர்களுக்கு, நம்முடைய எல்லையில்லாத அன்பையும், வணக்கத்தையும், துக்கத்தையும் அறிவிக்க நம் குரல் எழட்டும். கடவுளே! மிருகத்தனமான ஆட்சியை எங்களுக்கு அனுப்பாதே. மக்களுக்கிடையிலே சுதந்திரத்தை வளரச்செய்யும் வித்தாக, எங்களது வீரமிக்க இங்கிலாந்தை ஒரே நாடாக வைத்திரு.

இயற்கை வர்ணனையிலே, டென்னிஸன் தன் திறமையைக் காட்டுகிறுர். 'ஓய்னன்', 'தாமரை தின்னிகள்' என்னும் கவிதைகளிலே (அவை கிரேக்கக் கதைகளின் மொழிபெயர்ப்பா யிருந்தபோதிலும்) தொடக்கத்தில் கூறப்படும் இயற்கை எழிலைத் திறம்படத் தீட்டியிருக்கிறுர்.

மலைகளின் கம்பீரமான எழிலும், அவைகளின் இடுக்குகளும் குகைகளும், அதன் சரிவின் பாழடைந்த நிலையையும் படம் பிடித்துக்காட்டுகிறுர்.

'அதுதான் 'ஐயோனியன்' குன்றுகளுக்குள்ளே அழகான 'ஐடா' பள்ளத்தாக்கு. பள்ளத்தாக்கின்மீது பறந்துசெல்லும் பனியும், மூகிலினம்

களும், நீந்துபவனின் கையசைவுகளைப் போல, மரத்திற்கு மரம் நின்று நின்று செல்லும் பனி, முகில் பகுதிகளைச் சிதறுகின்றன. மலையின் இருபுறமும் பூம் படுக்கையுடன்கூடிய செழித்த புல் அடர்ந்த வெளிகள் உள்ளன. சரிவிற்குத் தூரத்திலே காடுகளுக்கிடையிலே நீர்வீழ்ச்சிகளையுண்டாக்கிக் கொண்டு, அந்த ஆறு கடலை நோக்கி சீறிக்கொண்டு செல்லுகிறது. உதிக்கும் சூரியனின் முதற்கிரணங்கள் படிகின்ற, 'ஐடா' குன்றுகளிலேயே உயர்ந்த சிகரமான 'கார்காரஸ்' பள்ளத்தாக்கின் அந்தப் புறத்தில் இருக்கிறது. முன்புறத்திலே, சிற்பத்திற் சிறந்த 'இலிய'நகரை, தலைநகராகக்கொண்ட 'ட்ரோ ஆஸ்' நாட்டின் காட்சி தென்படுகிறது."

"தூரத்திலுள்ள அந்த மலையருவி, கூச்சலிட்டுக்கொண்டு ஓடியது. அதன் உச்சியிலிருந்து என்னை அழைத்ததுபோன்றிருக்கிறது. அந்த தனிமையான உச்சியின்மீது புதிதாக வீழ்ந்திருந்த பனித்துண்டங்களின் மீது காலை ஞாயிற்றின் கிரணங்கள் ஒளி செய்தன"

"ஓடைகள் நிறைந்த பூமி. சில, மலைச்சரிவிலே ஓடுவது, புகையாலாகிய மெல்லிய பட்டால் மூடப்பட்டிருப்பது போன்றிருக்கிறது. சில நிழலையும் ஒளியையும் ஊடுருவிக்கொண்டு, தரைத்திரளையுருட்டிச் செல்லுகின்றன. உள்காட்டிலிருந்து வரும் ஒளிபெற்ற ஆறு கடலை நோக்கி ஓடுகிறது. பழைய பனியால் மூடப்பட்ட அந்த மூன்று மலையுச்சிகளும் மறையும் சூரியனின் செவ்வொளியில் பிரகாசிக்கின்றன. உதிரும பனிப்படலம் அவைகளை மூடியிருக்கிறது. பைன் மரத்தின் நிழல் இன்மையான தாவரங்களுக்கு மேலே நீளுகின்றது.

மேற்கத்திய அடிவானத்திலே ஆதவன் மறைய அவசரப்படவில்லை. மலைப் பிளவுகள் வழியாக தூரத்திலுள்ள நிலங்களும், 'பாம்' மரங்களைக் கரையாகவுடைய மஞ்சள்நிறக் காடுகளும், 'கேலிங்கேல்' பூக்கள் அழகு செய்யும் சம நிலங்களும் காணப்படுகின்றன. மாறாத நிலையுடைய பொருள்கள் நிறைந்த நிலம்."

'உலிஸஸ்' என்னும் கவிதையிலே சோம்பேறி வாழ்க்கையைப்பற்றிக் கூறுகிறார்.

"காட்டு நிலத்திலே அமைதியாக வாழும் சோம்பேறி அரசனால் என்ன பயன்? என்னுடைய மனைவி கிழவியாகிவிட்டாள். என்னையறியாத, சேகரிப்பதும், சாப்பிடுவதும் தூங்குவதுமே தொழிலாக உடைய, அநாகரிக மக்களுக்கு அநீதியை வழங்குகிறேன். நான் சும்மாயிருக்கப்போவதில்லை. வாழ்க்கையின் கடைசி இன்பத்தையும் அனுபவிக்க பிரயாணத்தைத் தொடங்கப் போகிறேன்."



# தாராவின் காதல் தாபம்

(வீ. செல்லராஜ்)

பகுத்தறிவு படைத்த மனிதனுக்கு மட்டும், பக்தி, காதல், நகைச் சுவை முதலிய உணர்ச்சிகள் உரித்தன்று. அவை பகுத்தறிவற்ற மிருகங்களுக்கும் பொதுவானவை. ஏன், மரஞ் செடிகொடிகளுக்கும் உண்டு! இவ்வுண்மையை கவிகளின் கவிதாசக்திகளின் மூலம் தமிழ் இலக்கியத்தில் உயர்வாகக் காண்கின்றோம்.

இயற்கைவனம் ததும்பும் பொழில். ஒரு சிற்றோடை அதை ஊடுருவிச் செல்லுகிறது. பச்சைக்கம்பளம் விரித்ததுபோன்ற புற்றரைகள். அப்பொழுதுதான் எழும்பும் மெல்லிய தென்றல்...உம். இவற்றை வருணித்துக் கொண்டிருக்க நேரமில்லை. இல்லை. அங்கு நான் கண்ட காட்சி என் மனத்தை இழுத்துக்கொண்டது. அதை நான் என்றும் மறக்கமுடியாது.

அந்த வோடையின் அக்கரையிலிருந்து ஒரு தாரா நீந்திவந்துகொண்டிருந்தது. நேராக இக்கரையை வந்தடைந்தது. கரையேறியதும் தன் உடம்பை உதறிவிட்டு நின்றது. பக்கத்தில் ஒரு தாழம்புதர். அதன் உச்சியிலே ஒரு அழகிய தாழம்பூ, தலையை நிமிர்த்தி எட்டிப்பார்த்துக் கொண்டிருந்தது. மாலைச் சூரியனின் பொன்னிறக் கிரணங்கள் அதன்மேல் படுகின்றன. அதனாலுண்டான அதன் நிழல் அத் தாராக் குருகின் பக்கத்திலே விழுந்துகொண்டிருந்தது.

அத் தாரா ஏதோ வொன்றை எதிர்பார்த்துக்கொண்டிருப்பதைப்போற் காணப்பட்டது. ஏன்? தன் காதலி—பேடைக்காகத்தான்! இல்லையென்றால் இந்தமாதிரியான முட்டாள்தனமான காரியம் செய்யுமா என்ன! காதலுக்குக் கண்ணில்லை என்பார்களே, அதை அப்போதுதான் கண்டேன். ஒரு இளந் தென்றல் மெல்லென வீசியது. அதனால் அத்தாழம்பூ இலேசாக ஆடியது. அத்தாராவின் பக்கலிலே விழுந்துகொண்டிருந்த அதன் நிழலும் அதற்கேற்றாற்போல் ஆடியது. காதல் உலகத்திலே கலந்திருந்த அத்தாரா அதைத் தன் பேடையென எண்ணிவிட்டது. கண்ணிற்படுவதெல்லாம் அதன் கண்களுக்குத் தன் காதலியெனத் தோன்றுவது இயற்கையே. ஆனால் அப்பேதைத் தாரா அத்தோடு நின்றுவிடவில்லை. அச்சாயலைத் தன் பேடையென்றெண்ணித் தழுவி முத்தமிடவும் முற்பட்டுவிட்டது.

என்ன வேடிக்கை பாருங்கள்! இது அத்தாழம்புதரின் பக்கத்தில் கொழுத்து வளர்ந்திருந்த ஆம்பல் பூவிற்கும் வேடிக்கையாகத் தோன்றியது. அவ்வளவுதான். யார்தான் இதைக் கண்டு சிரிக்காதிருப்பார்கள்? ஆம்பல் பூவும் சிரிக்க வாய் திறந்தது.

இச் சம்பவம் நமக்கும், ஆம்பல் பூவிற்கும் வேடிக்கையாகத் தோன்றலாம். ஆனால் தன் காதல் நெகிழ்ச்சியிலே ஏமாந்துபோகும் அத்தாராவிற்கு எப்படியிருக்கும்! எதைவேண்டுமானாலும் பொறுத்துக்கொள்ளலாம். காதல் சேஷ்டைகள் புரியும்போது யாராவது இடைஞ்சல் செய்தால் அதை மட்டும் பொறுக்க முடியாது. இது ஆம்பல் பூவிற்குத் தெரியாது. ஆனால்

(376-ம் பக்கம் பார்க்க.)

# வார்தா நினைவுகள்

("சமூகத்தொண்டன்.")

(சென்ற இதழின் தொடர்ச்சி.)

வாரந்தோறும்—என்—நினைத்த போதெல்லாம் ஆச்சார்யா வினோபாவைத் தரிசித்து வரப் புறப்பட்டு விடுவார்கள். யானும் அவ்வப்போது அவரைத் தரிசிக்கச் செல்வதுண்டு. ஆசிரமவாசிகள் கூட ஆச்சார்யாவிடம் அதிகநேரம் வர்த்தை பேச முடியாது. ஆனால், என்னிடம் நீண்டநேரம் பேசும் வழக்கமாய் விட்டது அவருக்கு. அவர், தமிழ் நாட்டின் பழக்க வழக்கங்கள், கோயில் வழிபாடு, இலக்கியம் ஆகியவற்றைப் பற்றி அறிந்திருந்தாலும், என்னிடத்திலும் நேரிலும் கேட்டறிவார். வினோபாவைப் போன்றோர், உலகத்தைப் பயிற்றி வரும் பெருமையுடையோரா யிருந்தும், எப்போதும் மாணவர் என்றே தங்களைப் பாவிக்கின்றனர்! யான் ஆச்சார்யாவின் தரிசனத்திற்குச் சென்ற நாட்களில் ஒரு மணி நேரத்திற்குக் குறைவாய்ப் பேசியதில்லை.

## ஆசிரமப் பார்வையாளர்கள்

ஆசிரமத்தைப் பார்க்க நாள் தோறும், நாட்டின் பல பாகங்களி லிருந்தும் நாட்டு மக்களும், தலைவர்களும் பெருவாரியாய் வருகின்றனர். யான் அங்கிருந்த இரு திங்களில் ஆசிரமத்திற்கு வந்தவர்களில் முக்கியஸ்தர்கள் வெகு சிலரே. அவர்களில் மைசூரில் திவானாக விருந்த திரு. சர். மீர்ஸா இஸ்மெயில், இலங்கை பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த பேராசிரியர் திரு. டாக்டர் மயில் வாகனன் தம்பதிகள், இந்திய சேவா சங்கத்தின் முக்கிய உறுப்பினரான திரு. P. கோதண்ட ராவ் தம்பதிகள் ஆகியோர். இவர்கள் ஒவ்வொருவரும் ஆசிரமத்தின் சேவைகளை அக்கரையுடன் விசாரித்து அறிந்துகொண்டது மன்றி, ஒவ்வொன்றையும் கவனத்துடன் பார்த்துப் போயினர்.

யான் ஆசிரமத்திலிருந்து பெற்ற அநுபவத்தைக்கொண்டு கதரியக்கம் சம்பந்தமாய் வரைய விருப்பம். ஆனால், இதில் எழுத முடியாதாகையால் ஒரு தனிக்கட்டுரை எழுதவெண்ணுகிறேன்.

## ஆசிரமத்திற்கு நமஸ்காரம்

நால்வரடி ஆசிரமத்தை ஆச்சார்யா வினோபா தோற்றுவித்தார். அந்த ஆசிரமமே ஓர் தனி அறிஞர் உலகம். அதில் இஸ்லாமியர், கிறிஸ்தவர் உள்ளிட்ட எல்லா இந்தியரும் உளர். அதில் சுதந்தரக்கனல் ஓங்குகிறது. தியாக ஆறு பெருக்கெடுத்துப் பாய்கிறது. அங்கு அமைதிக் காற்று வீசுகிறது. எல்லோரும் இன்பவானில் பறக்கின்றனர். அவ்வாசிரமம் தன்னைக் காண வரும் புரட்சி மனத்தையும் புனித மனமாய் மாற்றி விடுகிறது! இதற்கொரு உதாரணம்.

யான் ஆசிரமத்தைச் சேர்ந்த சில நாட்களுக்குப் பின் ஒருவர் வெளியேறினர். அவரும் யானும் ஒரே அறையில் தங்கியிருந்ததால் அவர் வாழ்க்கை வரலாற்றை யறிய முடிந்தது. அவர் வரலாறு மிகவும் பரிதாபகரமானது. அது பின்வருமாறு:—

திரு. இராக்கால் சந்திர டே ஒரு வங்காளி. அவர் மேல் வங்காளத்தைச் சேர்ந்த சிட்டாகங்கைச் சேர்ந்தவர். உயர்குடி பிறப்பாளர். கல்லூரி படிப்பைப் பெற்றவர். தேசபக்தி அவரை விழுங்கியே விட்டதால் அன்னை பாரதிக்கு அன்னியர் மாட்டிய விலங்குகளையும், மக்கள் அடிமைகளாக்கப்பட்டிருத்தலையும் கண்டு உள்ளம் குமுறிக்கொண்டிருந்தார். வழி யாதும் தோன்றிலது. புரட்சியியக்கத்திற் சேர்ந்துகொண்டார். பிரிட்டிஷ் அரசியலைக் கவிழ்க்கச் சதியாலோசனை செய்தார். அந்தக் குற்றத்திற்காக வேண்டி அவருக்கு ஆயுள் தண்டனை கிடைத்தது. ஐந்தரையாண்டு பம்பாய் மாகாணத்திலுள்ள கார்வார் சிறைக் கோட்டத்திலும் மற்றும் ஆறாண்டுகள் அந்தமான் தீவிலும் கிடந்தார். முடிவில் பாரத மக்கள் கோரியதால் புரட்சிக்காகத் தண்டனையடைந்தவர்களெல்லாம் விடுதலை பெற்றனர். அவர்களில் நமது இராக்கால் சந்திரடேயும் ஒருவர். விடுதலையானதும் அவர் வார்தா நோக்கி வந்தார். நால்வாடி ஆசிரமத்தையும் காண நேர்ந்தது. ஆச்சார்யா வினோபா போன்றவர்களின் நட்பால் அவர் மனமாறுதலானார். அவர் புரட்சி மனம் மாறிவிட்டது. காந்தியடிகளின் அஹிம்சை இலட்சியம் ஒன்றேதான் நாட்டை மீட்கவும் மக்களை தியாகத்திற்குப் பயிற்சியளிக்கவும் தகுதியுடையது என்ற வுண்மையைக் கண்டார். "என்போன்ற புரட்சி மனம் கொண்ட இளைஞர்களெல்லாம் அடிகளின் அஹிம்ஸா முறையை இலட்சியமாகக் கொண்டு தொண்டாற்றுவார்களானால், பிரிட்டிஷ் அரசியலார் பணிந்துவிடுவர்'' என்றார்; அவர் என்னிடம் ஓர் இரவு கூறினார்.

ஆகவே, இதுபோன்ற ஆசிரமம் பாரதநாட்டில் மட்டுமல்ல, பாரெல்லாம் ஓங்கவேண்டும். வாழ்க ஆசிரமம்! வாழ்க வினோபா!

இனி, ஆசிரமத்திலிருந்து விடைபெற்றுக்கொள்வோம். மேற்கொண்டு யான் ஆராயவிருப்பது தோல்பதனிடும் சாலை. இது ஆசிரமத்திற்கு மேற்கே கூப்பிடு தூரத்தில் உள்ளது.

காந்தி அடிகட்கு, ஹரிஜனங்களை இந்நாட்டில் நடத்தும் முறையைக் காணும்தோறும் நெஞ்சம் பதைக்கிறது. அவர் ஹரிஜனங்கள்பால் வைத்துள்ள அன்பை வெளியிடும் ஓர் சின்னமாகத் தோல்பதனிடும் சாலையை திறவினார். அடிகள் இத்தோல் பதனிடும் தொழிற்சாலையை ஒரு குழந்தையை வளர்ப்பதுபோல் அரும்பாடுபட்டு வளர்க்கின்றார். ஹரிஜனங்களின் உயர்வே நாட்டின் உயர்வு என்னும் தத்துவத்தை மக்களுக்கு உணர்த்துவது அடிகள் முயற்சியாகும்.

ஹரி ஜனங்கள் முன்னேற்றத்திற்கென்று சிலவாண்டுகட்கு முன்னர் அடிகள் தொடங்கிய யாத்திரையில் கிடைத்த பணத்தைக் கொண்டுதான் அந்தத் தொழிற்சாலையைத் தொடங்கினார். இப்போது அச்சாலையில் நூற்றுக்கு மேற்பட்ட ஹரிஜனங்கள் தொழில் செய்து பிழைக்கின்றனர். அவர்கள் வசிப்பதற்கென்று நல்ல கெட்டியான கட்டுக்கோப்பு விடுதிகளும் உதவப்பட்டிருக்கின்றன. அவரவர் வேலைக்குத் தக்கபடி 6 அணா முதல் ரூபாய் 1-8-0 வரையில் கொடுக்கப்படுகிறது.

## ஹரிஜன இளைஞர்கள் பயிற்சி.

பாரதநாட்டின் பல பாகங்களிலிருந்து ஆண்டுதோறும் நூற்றுக்கணக்கான ஹரிஜன இளைஞர்கள் இங்கு பயிற்சிக்கு வருகின்றனர். தோல்

பதனிடும் தொழில் ஹரிஜனங்களுக்குப் புதிதல்ல; அது அவர்களின் கால்வழியில், தலைமுறை தலைமுறையாய்ச் செய்து வரும் குடும்பத்தொழில். என்றாலும், மிகப் புதிதான பலவித முறைகள் இங்கே பயிற்றப்படுகின்றன. பயிற்சிக்கு வருவோர் தங்கள் தகுதிக்கும், விருப்பத்திற்கும் ஒத்தபடி. பயிற்சியின் ஒரு சில பிரிவுகளையோ அல்லது எல்லா வகைகளையுமோ பயிலலாம். பயிற்சியின் காலமும் அவரவர்கள் பயிற்சிபெறும் பிரிவுகட்குத் தக்கபடி 6 திங்கள் முதல் 3 ஆண்டுவரையும் நீளுகிறது.

## தோல் பதனிடுதலில் ஜீவகாருண்யம்.

எனவே, தோல் பதனிடும் தொழில் எதிர்காலத்தில் உச்ச நிலையை எய்த இச்சாலையில் அடிகோலப்பட்டு வருவதாகவே தொழில் நிபுணர்கள் பெருமைகொள்ளுகின்றனர். இங்கே பதனிடும் தோல்கள், உணவுக்காக கொல்லப்படும் மிருகங்களின் தோலல்ல. இயற்கை மரணத்தால் மாளும் மிருகங்களின் தோல்களாகும். இவ்விதி தொழிற்சாலையின் இலட்சியங்களில் முக்கியமானது. இயற்கையால் இறக்கும் மிருகங்களின் தோல் கிடைக்காவிடில் தொழிற்சாலையை மூடிவிடவும் தயங்கமாட்டார்கள்.

இங்கே பதனிடும் தோல்கள் மிகவும் உயர்ந்த ரகமாகின்றபடியால் சூட்கேஸ் முதல் பணப்பை (Purse) வரையில் தயார் செய்து அனுப்பப்படுகின்றன. ஆங்கிலத்தில் Glue என்னும் வஜ்ஜிரமும், மாட்டுக்கொம்பினலாகும் பித்தான்களுங்கூட இங்கு சேர்த்தியாய் தயாராகின்றன. இங்கே தயாராகும் மிதியடிகள் தனிச்சிறப்பு வாய்ந்தவை யென்பது வார்தா செல்வோர் நன்கு அறிவர்.

---

(373-ம் பக்கத் தொடர்ச்சி.)

அதன் பக்கத்திலே வானளாவி வளர்ந்திருந்த கோங்கு மரத்திற்கு நன்கு தெரியும். ஆம்பல் பூவின் செய்கை அதற்குப் பிடிக்கவில்லை. என் கோபமே வந்துவிட்டது. ஆம்பல் பூவை சிரிக்காதிருக்கும்படி செய்ய எண்ணியது. உடனே தன்னிடத்துப் பூத்து மிளிர்ந்திருந்த பூக்களிலே நிரம்பியிருந்த மகரந்தத் தூளை சிரிப்பதற்காகத் திறந்துகொண்டிருக்கும் ஆம்பல் பூவின் வாயிலே பலபலவென்று உதிர்த்துவிட்டது. ஆம்பல் பூவின் வாய் சிரிக்கமுடியாதபடி நிரம்பிவிட்டது. அதற்குமேல் சிரிக்க முடியுமா என்ன!

இச் சம்பவத்தை நான் பார்க்கவில்லை. உண்மையைச் சொல்லிவிடுகிறேன். இதைப் பார்த்த வேறொருவர் என்னிடம் சொன்னார். அவர் யார் தெரியுமா? அவர் பெயரைக் கேட்டமாத்திரத்திலேயே தமிழ்நாடு இன்புறும். அப்படிப்பட்ட தமிழபிமானி. அவர்தான் "மனோன்மணி" புகழ் சுந்தரம் பிள்ளையவர்கள். 'மனோன்மணி'யிலே, காஞ்சி நாடு என்ற நாகர் கோயிற் சிறப்பைக் கூறுமிடத்து:

"கேதகை மலர்நிழல் இனமெனக் கருதித்
தாதாத் தழுவிடச் சார்தரச் சிரித்த
ஆம்பல்வாய் கொட்டிடும் கோங்கலர்த்தாதே."

என்று சிறப்பித்துக் கூறுகிறார் குடிலனின் வாயிலாக.

[கேதகை—தாழை; இனம்—பேடை(காதலி); தாது—மகரந்தத்தூள்]

தொடர் கதை.

# தேவதேவி

(வத்றப்-சு. மீ. கணபதி)



## முதலாவது அத்தியாயம்

### அலை பாயும் உள்ளம்

மனிதனுக்கு கவலை உண்டானால் அவன் எது செய்வதற்கும் உபயோக மற்றவனாகிறான். சிலர் அக் கவலை ஒங்கி நிற்கா வண்ணம் செய்வதற்குப் பல வழிகளையும் கடைப் பிடிக்கிறார்கள். இன்னும் சிலர் அதே ஏக்கமாயிருந்து வியாதியின் அடைக்கலமாகி அல்லல் படுகிறார்கள். இது உலகில் சர்வ சாதாரணமாக நடை பெறுகிறது. எல்லாம் பொய் என வேதாந்திகள் முழங்குகிறார்கள். ஆயினும் பற்றற்றவனைத் தவிர மற்ற எல்லோரையுமே இது பிடிக்கிறது. அளவு மீறிய கவலையால் சில சமயங்களில் விரக்தி ஏற்படுகிறது.—நீடிப்பதில்லை. தனிமையை விரும்புவது இச்சமயங்களில் இயற்கை. வாசு மட்டில் இதற்கு விலக்கோ?

வாசு தனிமையை நாடினான். பெரிய நகரங்களில் தனிமையைக் காண்பது மிகவும் கடினம். ஆகவே, அவன் கடற்கரையை நாடி கூட்டமில்லாத பகுதியில் உட்கார்ந்து கடலின் அலைகளை உன்னிப்பாகப் பார்த்துக் கொண்டிருந்தான். கடலின் அலைகள் பெரிதா? தன் மனதுள் பொங்கி எழும் கவலையின் அலைகள் பெரிதா? என சிந்திப்பவன் போன்று காணப்பட்டான். மனதைக் கட்டி ஒரு நிலையில் கொண்டு வர அவன் மிகுந்த சிரமப்பட்டான். முடியவில்லை. இதன் நடுவில் அவனையுமறியாமல் மனம் ஆகாசக் கோட்டைகள் வேறு கட்ட ஆரம்பித்துவிட்டது. இதை நினைத்து அந்தக் கவலைகளையும் மீறிச் சிரித்தான். களையற்ற முகத்தில் விளங்கிய அந்த புன்னகைதான் காண எவ்வளவு நன்றாக இருந்தது. தான் சிரித்ததை நினைத்து கவலையிலும் ஆனந்தமா? இது தானோ உலகவாழ்வு? விசித்திர சுபாவம் கொண்ட உலகையும் அதனிடம் உள்ள மனிதரையும் நினைத்துப் பார்த்தான்.

அவன் சிந்தனையும், கவலையும் பறந்தது. இவ்விதம் செய்தது அவன் நண்பன் சோமுவின் சோதரி குரல். இந்தக் குரல் இனிமையை அவன் பெரிதும் விரும்புகிறான் என்பது அவன் முகத்தில் ஏற்பட்ட தெளிவிலிருந்து தெரிந்தது. ஆனால், அவன் வந்தவளை வரவேற்கும் சக்தியற்றவனாகத் தென்பட்டான். அதோ அவளும் நெருங்கி வந்து விட்டாள். சிரமத்துடன் புன்னகையை வருவிக்க முயன்றான். முடியவில்லை. அதற்குப் பதில் அவன் முகத்தில் கவலையின் குறியே அதிகப்பட்டது. இதைக் கண்டான் வந்தவள். அவள் முகமும் வாட்ட மடைந்தது. தன்னைச் சமாளித்துக் கொண்டு, "ஏன் உங்கள் முகம் கவலையைக் காட்டுகிறது?......... நான் வந்ததில் உங்களுக்கு அசௌகரிய மில்லையே!" என்றாள்.

“ஒரு அசௌகரியமு மில்லை. நீ வந்திருப்பதில் நான் சந்தோஷமே கொள்கிறேன். நீ மட்டும் தான் இங்கு வந்திருக்கிறாயா? அல்லது சோமுவும் வந்திருக்கிறானா?”

“நான் தனிமையில் தான் வந்தேன். உங்கள் கவலை எது பற்றியது? என்று நான் அறியலாமோ!”

“எனக்கு ஒரு கவலையு மில்லை. தனிமையி லிருந்ததால் பழைய நினைவுகள் என் மனக்கண் முன் தோன்றவே, அதுவே நினைவா யிருந்தேன். அதிருக்கட்டும். உனக்கு பி. எ. படிக்க உத்தேச மில்லையா? தொழில் முறையில் படிக்க உத்தேசமா?”

“இதுவரை படித்ததற்கே அண்ணா மிகுந்த சிரமப்பட வேண்டி வந்தது. எந்தவிதமான படிப்பும் இனி வேண்டா மென்பதுதான் என் எண்ணம்.”

“பின், மணம் செய்து கொள்ள வேண்டியதுதான் போலிருக்கிறது. வீட்டு வேலைகளை யெல்லாம் தனியாகச் செய்யவேண்டிய பயிற்சியில் இறங்கி யிருப்பாயென நினைக்கிறேன். எப்பொழுது உன் மணத்தை நிறைவேற்ற சோமு எண்ணி யிருக்கிறான்?”

“எனக்குத் தெரியாது. அதிருக்கட்டும். என்னைப் பற்றி இவ்வளவு அக்கறையாக விசாரிக்கிறீர்களே. நான் கேட்கும் கேள்விகளுக்குப் பதில் சொல்வீர்களா?”

“சரி; கேளேன்.”

“பெண்களைப் பற்றி நீங்கள் எவ்வித அபிப்பிராயம் கொண்டிருக்கிறீர்கள்?”

“என்? நல்ல அபிப்பிராயம் தான்.”

“பின் என் நீங்கள் இன்னும் மணந்து கொள்ளவில்லை!”

“இது என்ன கேள்வி, சுந்தரா? காலம் வரவில்லை என்று தான் சொல்லவேண்டும் என நினைக்கிறேன்.”

“பாட்டி கதை படிக்கிறீர்கள். காலம் வரவேண்டுமாம்! உண்மையான காரணத்தை என் மறைக்க முயல்கிறீர்கள்? உங்கள் மனதிலுள்ளதைத்தான் சொல்லுங்களேன். நீங்கள் யாரையாகிலும் காதலித்து வருகிறீர்களா? ஒளியாமல் கூறுங்கள்.”

“வீட்டிற்கு வந்தால் தான் விளையாட்டாகப் பேசுகிறாய் என்றால் வெளியிலுமா அவ்விதம் பேசுவது? சுந்தரா, வேறு எதைப் பற்றியாவது பேசலாம்?”

“எதைப் பற்றியும் பேச வேண்டாம். என் மண விஷயத்தில் ரொம்ப அக்கறை காண்பிக்கிறீர்களே உண்மையில் செய்கையிலும் அப்படியிருக்குமா அல்லது வெறும் வாய் வீச்சுதானா? என்பதை நான் முதலில் அறிய விரும்புகிறேன். நீங்கள் என் விஷயத்தில் அநுதாப முடையவரா யிருந்தால் இந்தவிதம் பேசமாட்டீர்கள்.”

“சுந்தரா! நீ என் இவ்வளவு படபடப்புடனும், ஆவேசத்துடனும் பேசுகிறாய்? என்னால் முடிந்ததைச் செய்து உனக்கு இஷ்டமானவனுக்கு

மாலை விடும்படியான ஏற்பாட்டை சோமுவுடன் கலந்து நான் செய்கிறேன். இதுவரை, உனக்கு உலக வியவகாரம் தெரியாது என நான் நினைத்திருந்தது தவறு."

"நான் உங்களைச் சில கேள்விகள் கேட்கப் போகிறேன்? அவைகளுக்குச் சரியான பதில் கூறவேண்டும். என்ன சொல்கிறீர்கள்?"

"எத்தனை கேள்விகள் வேண்டுமானாலும் கேள். தெரிந்த மட்டில் பதில் சொல்கிறேன். குதர்க்கமாக மட்டும் பேசவேண்டாம்."

"சரிதான். நான் கேட்கிறேன்; நீங்கள் உண்மையில் எங்களுக்கு நண்பனாக இருக்க நினைத்தால், எங்களுக்கு உதவிசெய்ய உங்களால் முடியும் என்று கருதுகிறேன். என் அந்தப்படி எண்ணமுண்டா இல்லையா?"

"அவசியம் எல்லா உதவிகளும் என் சக்திக்கு இயன்றமட்டில் செய்கிறேன்."

"என்னைப் பற்றி உங்கள் அபிப்பிராய மென்ன?"

"நல்ல கேள்வி. இதை நீ கேட்காமல் மற்றவர் கேட்டிருந்தால், மிகவும் சுலபமாய்க் கொடுக்க முடியும். நீ கோபித்துக் கொள்ளமாட்டாய் என நினைத்தே சொல்கிறேன். நல்ல குணம்—சமய சந்தர்ப்ப மில்லாமல் கேள்விகள் கேட்பது—விளையாடுவது—குறுக்குக் கேள்விகள் கேட்டுப் பிறரை கேலி செய்வது இத்யாதி."

"ஆகவே, நீங்கள் என்னைப்பற்றி மிகத் தாழ்மையான அபிப்பிராயங் கொண்டிருக்கிறீர்கள். நான் கோபித்துக் கொள்வேன் என நினைத்து, நடுவில் ஒரு நல்ல குணத்தையும் சேர்த்துக் கொண்டீர்கள் போலும். என்னைப் பற்றிய உண்மை அபிப்பிராயத்தை வெளியிட்டதற்காக நான் மிகவும் கடமைப்பட் டிருக்கிறேன். தங்களைப் பற்றி நான் கொண்டுள்ள அபிப்பிராயத்தையும் சொல்கிறேன். கவனமாகக் கேட்கவேண்டும். சொல்வதை மறைப்பது—தெரிந்ததையும், அபிப்பிராயத்தையும் கூற மறுப்பது—பெண்களுக்குச் சரியான மரியாதை கொடாதிருத்தல் ஆகியவை. இவை ஆடவரின் தனிப்பட்ட உரிமை போலும்! தவிரவும் சாந்த குணமும், அன்பும் கூட உங்களுக்கு இருக்கிறது."

"நாம் இந்தத் தர்க்கத்தி லிறங்கினால் நாட் கணக்காக வாதிக்க வேண்டி வரும். இந்த ஐந்து வருடங்களாக நீ என்னுடன் பழகி வந்ததில், என்னை நன்றாக அறிந்துகொண் டிருப்பதாகக் காண்பித்தது பற்றி எனக்குத் திருப்தி."

"ஆமாம். நீங்கள் என்னைப் பற்றிக் கூறியதை நோக்கினால் என் போன்ற ஒரு பெண்ணை மணக்க மறுத்து விடுவீர்களெனத் தீர்மானிக்கிறேன். பணத்தைப் பார்த்தால் இன்னும் மோசமான பெண்கள் தான் அகப்படுவர்."

"நான் யாரிடமும் பணம் கேட்கவில்லை. என்னை அணுகியவர்களிடம், நான் தற்பொழுது மணம் செய்துகொள்ளும் எண்ணமில்லை என்றே கூறி வந்திருக்கிறேன். எனக்குத் தகுந்த பெண்கள் கிடைக்கவில்லை என்பதனா லன்று. ஏனெனில், நான் அப்பெண்களைப் பார்த்ததும் கிடையாது; அவர்களைப் பற்றி அறிந்து கொள்ளவும் முயற்சித்தது கிடை

யாது. சுந்தரா ; மணி எட்டாகப் போகிறது. சீக்கிரம் நீ உன் வீடு போக வேண்டும். எழுந்திரு."

"உங்களுக்குத் தொந்திரவு கொடுக்க விரும்பவில்லை. என் வீடு வரை கூட வந்தால் பேசிக்கொண்டு செல்லலாம்" என சுந்தரா கூறவே வாசு சம்மதித்தான்.

போகும் வழியில் சுந்தரா, "உதாரணமாக, என்னை நீங்கள் மணந்து கொள்ள வேண்டுமென்று நானும் மற்றவரும், சிநேகத்தன்மையால் உங்களை வற்புறுத்தினால் என்ன செய்வீர்கள்?" என்று கேட்டு மீண்டும் பேச்சைத் தொடங்கினாள்.

"ஓடிப்போய் விடுவேன் என்று வைத்துக் கொள்ளேன். இன்று உன் தமாஷ் பேச்செல்லாம் விபரீதமாகவே தெரிகிறது. மணம் செய்து கொள்ளவேண்டும் என்ற ஆசை மிதமீறி விட்டது போலத் தோன்றுகிறது."

"அது எப்படியாயினும் இருக்கட்டும். என்னை மணக்க மறுப்பதெனில் காரணம் சொல்ல வேண்டாமா?"

"அவசியம் சொல்ல வேண்டுமா? நான் அவசியமெனக் கருதவில்லை. உன் பத்தாவது வயது முதல் நான் உன் அண்ணனுடன் அடிக்கடி உன் வீடு வந்துகொண்டிருக்கிறேன். உன் புத்தி சாதுர்யத்தைக் கண்டு உன்னை என் சகோதரியாகவே கருதி வந்திருக்கிறேன். அந்த உறவு நீடிக்க என்றும் பிரார்த்தனை செய்வேன். வேறுவித அன்பை உன்மேல் செலுத்த நினைப்பது பாவமான செய்கை என்றே நான் கருதுகிறேன்."

"ஒரே வீட்டில் சிறு குழந்தைகள் முதல் ஒன்றாக வளர்ந்து வருபவர்கள் மணம் செய்துகொள்ளும் முறை இருந்தால் மணந்துகொள்வதில்லையா? எனக்கு மட்டிலும் இது விஷயத்தில் விலக்கு ஏன்? இக்கேள்விக்கு பதில் சொல்லுங்கள்."

அடடவனே! வாசு ஊமையாகிவிட்டான். அவனால் பேசவே முடியவில்லை. அவன் முகத்தையே சிறிது நேரம் கூர்ந்து நோக்கினான். உண்மையிலேயே இக்கேள்வியை அவள் கேட்கிறாளா? என்று சிந்திக்கத் தலைப்பட்டான். அவன் சிரமும் தாழ்ந்தது. பூமியைப் பார்த்தபடியே நடந்து சென்றான்.

"வாசு! அடேய்! எங்கேடா போகிறாய்? சாப்பிட்டாயிற்றா இல்லையா?" என்று கேட்டவாறு சோமு வாசுவின் கையைப் பற்றித் தன் வீட்டிற்கு அழைத்துச் சென்றான். வாசு தலை நிமிர்ந்து பார்க்கும்பொழுது சோமுவின் வீட்டைத் தாண்டி தான் சென்றுகொண்டிருந்ததை அறிந்து வியந்தான். சுந்தரா பேசாமல் நழுவிவிட்டதைக் கண்டு அவள் குறும்புத்தனம் இன்னும் போகவில்லையா அல்லது நமது பதில் பிடிக்காமல், சொல்லிக்கொள்ளாமல் சென்றுவிட்டாளா? எனப் பலவாறு யோசித்துக் கொண்டே நடைப்பிணம் போன்று சோமுவுடன் சென்றான். சோமு, வாசுவின் முகத்தோற்றத்தால் அவன் ஆழ்ந்த யோசனையிலிருக்கிறான் என எண்ணி, வேறு விசாரியாமல் அழைத்துச் சென்றான். பாதையில் நின்றிருந்த சுந்தரா, வாசுவைக் கண்டு, நகைத்துக் கொண்டே, "வரவேண்டும்; சுவாமிகளே! கிஷ்டையிலிருந்தால் சுவாமிகளுக்கு வீடுகூடத் தெரிய

மாட்டேனென்கிறது. அண்ணு, இவர் நிஷ்டையைக் கலைத்துவிட்டீர்களே. கால் கை சுத்திசெய்ய ஜலம் கொண்டுவருகிறேன்" எனக் கூறி உட் சென்ருள். இருவரும் அறையினுள் சென்று உட்கார்ந்தனர். இருவரும் ஒருவர் முகத்தை மற்றவர் பார்த்தனரே தவிர, சில நிமிடங்கள் வரை பேசிக்கொள்ளவேயில்லை. சோமுவே முதலில் பேச ஆரம்பித்தான்.

"என்னடா ஊமை மாதிரி யிருக்கிறாய்? உனக்கு ஏதாவது துன்பம் நேரிட்டதா?......"

"ஒன்றுமில்லை. தயவு செய்து காபி போட்டு எடுத்துவா அல்லது ஹோட்டலிலிருந்து வாங்கிவா. அதைச் சாப்பிட்டு படுத்து விடவேண்டும். என் உடல் நலம் சிறிது பாதித்திருக்கிறது" என்று இடைமறித்து கூறினான் வாசு.

"சிறிது ரசம் சாதம் சாப்பிட்டால் சௌகரியமா யிருக்கும். காபி வேண்டாம்."

"என்னால் சிறிதும் சாப்பிடமுடியாது. தொந்திரவு செய்யாதே. நான் சொல்லியபடி செய்." காபி தருவிக்கப்பட்டது. சாப்பிட்டதும், "நாளை உங்களைச் சந்திக்கிறேன்" எனக் கூறி எழுந்தான் வாசு. "கூடாது; இங்கேயே படுத்துக்கொள்" எனத் தடுத்துக்கூறி அவனுக்குப் படுக்கை போட்டுக் கொடுத்தான் சோமு.

இவற்றையெல்லாம் பார்த்து சுந்தரா அழுதுவிட்டாள். ஆனால் தான் அழுவது மற்றவர்களுக்குத் தெரியக்கூடாதென மறைத்துக்கொண்டாள். அவள் மனதில் வாசுவின் வியாகூலத்திற்குத் தான் காரணம் என்பதை நினைக்கையிலேயே, அவள் மனம் துன்பத்தை அடைந்தது. அவள் பல பல எண்ணினான். வாசு தன்னை மணக்கொள்ள ஒப்பமாட்டாரோ என நினைப்பாள். 'அவர் மனம் மாறும். என்னிடம் எவ்வளவு பிரியத்துடன் நடந்துகொள்கிறார்' என சமாதானம் செய்துகொள்வாள். இப்படியே சிறிதுபொழுது கழிந்தது. சோமு சாப்பாட்டை முடித்துக்கொண்டு நண்பன் படுத்திருந்த அறைக்குள் வந்தான். வாசு உத்திரத்தையே வெறித்து நோக்கிக்கொண்டிருந்தான். அவன் கண்களில் கண்ணீர் வழிந்திருந்தது. சோமுவை எதிரில் கண்டதும் தன்னைச் சமாளித்துக்கொண்டு வரவேற்றான்.

"வாசு! இவ்வளவு காலம் உன்னுடன் பழகியிருந்தும், என்றும் நீ இவ்விதம் துன்பப்பட நான் பார்த்ததில்லை. ஊருக்குச் சென்றிருந்த இடத்தில் உனக்கு ஏதாவது துன்பம் சமீபித்ததா? என்னிடம் கூறுவதால் தவறு ஒன்று மில்லையே. உற்றதை நண்பனிடம் கூறினால் மனத்தின் பாரம் சிறிது குறையும். ஊரிலிருந்து பணத்திற்கு நீ தந்தி கொடுத்ததும் ஏதோ துன்பம் நேரிட் டிருக்கலாமென நினைத்தே தந்தி மணியார்டரில் பணமனுப்பினேன். பணம் தேவையாக இருந்தது என ஒரே வார்த்தையில் காலையில் முடித்து விட்டாய். தவிரவும் ஒருவாரம் லீவில் சென்று நான்காம் நாளே திரும்பி வந்திருக்கிறாய். எனக்குச் சொல்லக் கூடாதா? என்னால் உனக்கு ஆறுதல் சொல்ல முடியாதா? அல்லது உனக்கு வேறு ஏதேனும் கவலையா? உள்ளதைச் சொல்லேன்"

"சோமு! விஷயம் அவ்வளவு பிரமாதமானது ஒன்றுமில்லை. உன்னிடம் சொல்லக் கூடாததும் இல்லை. நான் தந்தி கொடுத்ததும் பணமனுப்பினாயே! அதற்கே நான் எவ்வளவோ கடமைப்பட் டிருக்கிறேன். என் துன்பத்தையும் உனக்குப் பகிர்ந் தளிப்பதெனில் முடியாது. அது

என்னுடனேதா னிருக்கவேண்டும். ஒரு நாள் அல்லது ஒரு வாரம் இந்த துன்பத்தின் சாயை படர்ந்திருக்கும். அதன் பின்பு மாறிவிடும். துன்பம் வந்தாலே வருந்துவதும், இன்பம் வந்தபோது ஆனந்திப்பதும் கூடாதுதான். ஆனால் மனதை இவற்றில் பிரவேசிக்க விடாமல் இருத்த முடியவில்லையே; இதுதான் என் கவலை. மணி பத்து ஆகிவிட்டது. நீ படுத்துக்கொள். காலையில் பேசிக் கொள்ளலாம்."

"நான் சொல்லப் போவதை நம்பமாட்டாய். உன் துயரம் உன்னைத் தூங்கச் செய்யாது. நான் மாத்திரம் தூங்குவதெனில் நன்றாக இல்லை. தவிரவும் எனக்குத் தூக்கம் வருமெனவும் எண்ணவில்லை. உன் சமாசாரத்தைச் சொன்னால் அதனால் உன் பாரம் சிறிது குறையலாம். ஆனால் நீ விஷயத்தைச் சொல்லத்தான் வேண்டுமென்று வற்புறுத்த விரும்பவில்லை. உன் இஷ்டப்படி எப்பொழுது நீ சொல்கிறாயோ அப்பொழுதே விஷயத்தைத் தெரிந்து கொள்கிறேன். விளக்கைச் சிறியதாக வைத்து விடுகிறேன். நிம்மதியாகத் தூங்க முயற்சி செய்" எனக் கூறி பக்கத்தில் தனக்கெனப் படுக்கை விரித்து சோமு படுத்துக் கொண்டான். சோமுவுக்கும் தூக்கம் வரவில்லை. வாசுவுக்கு என்ன துன்பம் நேர்ந்திருக்கும் என்றே அவன் ஆராயத் தொடங்கினான்.

வாசு படுக்கையிலிருந்தானே தவிர முட்களின் மீது படுத்திருந்தது போலவே தென்பட்டது. தான் ஊர் போய் வந்ததும், சந்திராவின் கேள்விகளும் மாறிமாறி அவனுக்கு கவனம் வந்தது. சித்திராதேவி அருள் பாலிக்க மறந்துவிட்டாள். அடிக்கடி புரண்டு படுப்பதும், முணுகுவதுமாகவே இருந்தான். கண்ணீர் இப்பொழுது வரவில்லை. கண்களில் நீர் வற்றிவிட்டதாகவே கருதினான். மனம் விட்டு அரற்றினால் சிறிது நிம்மதி பிறக்காதா என எண்ணினான். ஆனால் இடம் நண்பனது வீடு என்பது கவனத்திற்கு வரவும், தான் இங்கு வந்தது தவறு என அவன் மனம் எடுத்துக் காட்டியது. சோமுவின் அன்பு மொழிகளை நினைத்தான். இவ்வளவு கனிவுடன் நம்மிடம் நடந்துகொள்ளும் மனிதர் உலகில் அவனைத் தவிர வேறு யாருமில்லை. 'என் கவலையை அவனுடையதாகப் பாவிக்கிறானே' என்ற சாந்தி ஒருபுறம். இவ்வித சிந்தனையின் நடுவே படுக்கையில் உட்காருவதும், படுப்பதுமாக இருந்தான். மணி மூன்று அடித்த சப்தம் கேட்டதும் தூங்க முயற்சி எடுத்து அதில் வெற்றிபெற்றான்.

சந்திராவைப் பற்றியும் சிறிது கூறுதல் வேண்டும். தன் அண்ணனும் வாசுவும் பேசிக்கொண்டிருந்தபொழுது பக்கத்து அறையிலிருந்து இவர்கள் சம்பாஷணையைக் கேட்டாள். தன் சோதரனின் அன்பு மொழிகளைக் கேட்டு ஆனந்தித்தாள். தனக்கு அவன் சகோதரனாக இருப்பதைப் பற்றி கர்வமடைந்தாள். அவளுடைய மனக் கலக்கமும் ஒருவாறு அவர்கள் சம்பாஷணையால் போயிற்று. அதாவது தன் பேச்சுக்களுக்காக வாசு வருந்தவில்லை. வேறு ஏதோ காரணத்தினால்தான் வருந்துகிறான் என்பது அவளுக்கு நன்றாக விளங்கியதும், தன் மனத்தை அழுத்திக்கொண்டிருந்த பாரம் நீங்கியதாகவே உணர்ந்தாள். அவளும் நித்திரைகொள்ள அதிக நாழிகை பிடித்தது. சோமுவின் மனைவியோ அன்றி அவன் தாயாரோ இவ்விஷயங்களை அறியவில்லை. எப்பொழுதும்போல் அவர்கள் பேசிக்கொண்டிருப்பதாகவே நினைத்தார்கள். வழக்கம்போல் எல்லோரும் அதிகாலையிலேயே எழுந்து காலைக் கடன்களை முடித்துக்கொண்டனர்.

## சித்திரபானு௵ மாசி௴ நவக்கிரக [illegible]

(இந்தியா ஸ்டாண்டர்ட் கடியார மணி-சென்னை காலை 7-மணிக்கு)

| தேதி | நக்ஷத்திர ஹோரை | | | சூரியன் | | சந்திரன் | | அங்காரகன் | | புதன் | | குரு | | சுக்கிரன் | | சனி | | †ராகு | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | ம | நி | ச | பா | க | பா | க | பா | க | பா | க | பா | க | பா | க | பா | க | பா | க |
| | | | | | | | | | | | | (வ) | | | | | | | |
| 1 | 9 | 28 | 35 | 300 | 36 | 39 | 55 | 255 | 20 | 273 | 22 | 81 | 45 | 318 | 26 | 42 | 39 | 121 | 39 |
| 2 | 9 | 32 | 32 | 301 | 37 | 52 | 26 | 256 | 01 | 274 | 26 | 81 | 38 | 319 | 38 | 42 | 41 | 121 | 36 |
| 3 | 9 | 36 | 28 | 302 | 38 | 64 | 37 | 256 | 43 | 275 | 29 | 81 | 32 | 320 | 52 | 42 | 43 | 121 | 33 |
| 4 | 9 | 40 | 25 | 303 | 39 | 76 | 49 | 257 | 26 | 276 | 33 | 81 | 26 | 322 | 04 | 42 | 46 | 121 | 30 |
| 5 | 9 | 44 | 21 | 304 | 39 | 88 | 56 | 258 | 08 | 277 | 39 | 81 | 20 | 323 | 16 | 42 | 48 | 121 | 27 |
| 6 | 9 | 48 | 18 | 305 | 40 | 101 | 03 | 258 | 50 | 278 | 45 | 81 | 13 | 324 | 28 | 42 | 49 | 121 | 23 |
| 7 | 9 | 52 | 14 | 306 | 40 | 113 | 06 | 259 | 29 | 279 | 53 | 81 | 07 | 325 | 39 | 42 | 51 | 121 | 19 |
| 8 | 9 | 56 | 11 | 307 | 41 | 125 | 09 | 260 | 08 | 281 | 02 | 81 | 00 | 326 | 50 | 42 | 53 | 121 | 16 |
| 9 | 10 | 00 | 07 | 308 | 41 | 137 | 42 | 260 | 50 | 282 | 11 | 80 | 53 | 328 | 01 | 42 | 55 | 121 | 13 |
| 10 | 10 | 04 | 04 | 309 | 42 | 150 | 15 | 261 | 32 | 283 | 20 | 80 | 47 | 329 | 13 | 42 | 57 | 121 | 09 |
| 11 | 10 | 08 | 00 | 310 | 43 | 163 | 10 | 262 | 14 | 284 | 29 | 80 | 41 | 330 | 25 | 42 | 59 | 121 | 06 |
| 12 | 10 | 11 | 57 | 311 | 44 | 176 | 05 | 262 | 56 | 285 | 38 | 80 | 35 | 331 | 37 | 43 | 00 | 121 | 03 |
| 13 | 10 | 15 | 53 | 312 | 44 | 189 | 29 | 263 | 38 | 286 | 46 | 80 | 29 | 332 | 48 | 43 | 02 | 121 | 02 |
| 14 | 10 | 19 | 50 | 313 | 44 | 202 | 54 | 264 | 20 | 287 | 54 | 80 | 22 | 333 | 00 | 43 | 04 | 120 | 59 |
| 15 | 10 | 23 | 46 | 314 | 45 | 216 | 46 | 265 | 03 | 289 | 02 | 80 | 16 | 335 | 12 | 43 | 06 | 120 | 56 |
| 16 | 10 | 27 | 43 | 315 | 45 | 230 | 39 | 265 | 46 | 290 | 37 | 80 | 10 | 336 | 24 | 43 | 08 | 120 | 53 |
| | | | | | | | | | | | | ஸ்தம் | | | | | | | |
| 17 | 10 | 31 | 40 | 316 | 46 | 244 | 55 | 266 | 30 | 292 | 19 | 80 | 10 | 337 | 35 | 43 | 10 | 120 | 50 |
| 18 | 10 | 35 | 36 | 317 | 46 | 259 | 11 | 267 | 14 | 293 | 42 | 80 | 10 | 338 | 47 | 43 | 12 | 120 | 47 |
| 19 | 10 | 39 | 33 | 318 | 46 | 273 | 31 | 267 | 58 | 295 | 15 | 80 | 10 | 339 | 58 | 43 | 14 | 120 | 44 |
| 20 | 10 | 43 | 30 | 319 | 46 | 287 | 51 | 268 | 43 | 296 | 48 | 80 | 10 | 341 | 10 | 43 | 17 | 120 | 40 |
| 21 | 10 | 47 | 27 | 320 | 47 | 302 | 02 | 269 | 27 | 298 | 20 | 80 | 10 | 342 | 22 | 43 | 19 | 120 | 37 |
| 22 | 10 | 51 | 23 | 321 | 47 | 316 | 14 | 270 | 12 | 299 | 53 | 80 | 10 | 343 | 34 | 43 | 21 | 120 | 34 |
| 23 | 10 | 55 | 29 | 322 | 47 | 330 | 12 | 270 | 56 | 301 | 25 | 80 | 10 | 344 | 46 | 43 | 23 | 120 | 31 |
| 24 | 10 | 59 | 16 | 323 | 47 | 344 | 11 | 271 | 41 | 302 | 58 | 80 | 10 | 345 | 58 | 43 | 26 | 120 | 27 |
| 25 | 11 | 03 | 02 | 324 | 47 | 357 | 24 | 272 | 14 | 304 | 33 | 80 | 10 | 347 | 09 | 43 | 29 | 120 | 24 |
| 26 | 11 | 07 | 09 | 325 | 47 | 10 | 38 | 273 | 08 | 306 | 09 | 80 | 10 | 348 | 21 | 43 | 32 | 120 | 21 |
| 27 | 11 | 11 | 05 | 326 | 47 | 23 | 28 | 273 | 51 | 307 | 49 | 80 | 10 | 349 | 31 | 43 | 35 | 120 | 17 |
| 28 | 11 | 15 | 02 | 327 | 47 | 36 | 19 | 274 | 35 | 309 | 30 | 80 | 10 | 350 | 42 | 43 | 39 | 120 | 14 |
| 29 | 11 | 18 | 58 | 328 | 47 | 48 | 43 | 275 | 18 | 311 | 15 | 80 | 10 | 351 | 53 | 43 | 42 | 120 | 10 |

### ஆகாயக் காட்சி.

இம்மாதம் 4௳ மாலை (முன் இரவு) மணி 8 நிமிஷம் 55 சந்திரனுக்கு வடக்கில் பாகை [illegible] கலை 30-ல் குரு சமாகமம். 20௳ பின் இரவு (-அதாவது 21௳ சூர்யோதயத்திற்கு முன்) சந்திரனுக்கு வடக்கில் பாகை. கலை 07-ல் புத சமாகம்,

*அயனாம்சம் பா-22 கலை-55 விகலை 51 கூட்ட சாயன ஸ்புடம் வரும். †ராகு ஸ்புடத்துடன் ஆறு ராசி அல்லது பாகை 180 கூட்ட கேதுஸ்புடம் வரும்.

# "ஆனந்தபோதினி" பஞ்சாங்கம்.

சித்திரபானுஞு மாசிமீ—கலியுகாதி 5044, சாலிவாகனம் 1865
பசலி 1352, கொல்லமாண்டு 1118, ஹிஜிரா 1362
இங்கிலீஷ் 1943ஞு பிப்ரவரிமீ—1943ஞுமார்ச்சுமீ

| மாசிமீ | பிப்ரவரிமீ | வாரம். | திதி. | நக்ஷத்திரம் | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 13 | சனி | நவ43-13 | ரோ60 | அமி60 | திருதினஸ்பிருக், ஆனந்த தீர்த்தம், மத்வநவமி |
| 2 | 14 | ஞா | தச46-47 | ரோ3-0 | சித்60 | மாடுவாங்க, விதைவிதைக்க |
| 3 | 15 | திங் | ஏகா51-35 | மிரு8-25 | சித்60 | பீஷ்மபஞ்சகம், ஜெய ஏகாதசி, மாடு வாங்க |
| 4 | 16 | செவ் | துவா57-1 | திரு14-23 | மா60 | பீஷ்ம துவாதசி |
| 5 | 17 | புத | திர60 | புன20-25 | சித்60 | திருதினஸ்பிருக் |
| 6 | 18 | வியா | திர2-23 | பூச29-0 | அ29-0சி | மகா மாசி, நடராஜர் அபிஷேகம் |
| 7 | 19 | வெள் | சது7-12 | ஆயி33-0 | ம33-0சி | நவகிரகசாந்தி செய்ய |
| 8 | 20 | சனி | ○10-47 | மக38-25 | அ38-25சி | பௌர்ணமி, மாசிமகம் சந்திரகிரஹணம் தெரியாது |
| 9 | 21 | ஞா | பிர13-48 | பூர42-0 | சி42-0ம | |
| 10 | 22 | திங் | துதி15-35 | உத்44-25 | சித்60 | |
| 11 | 23 | செவ் | திரி16-48 | அஸ்46-11 | சித்60 | |
| 12 | 24 | புத | சது16-11 | சித்47-25 | சித்60 | |
| 13 | 25 | வியா | பஞ்14-25 | சுவா46 12 | அ46-12சி | |
| 14 | 26 | வெள் | சஷ்11-23 | வி44-25 | சித்60 | |
| 15 | 27 | சனி | சப் 7-48 | அ41-23 | சித்60 | |
| 16 | 28 | ஞா | அஷ்3-0 நவ58-12 | கே47-49 | ம47-49அ | |
| 17 | 1943ஞு மார்ச்சுமீ 1 | திங் | தச52-11 | மூல34-11 | சி34-11ம | கரிநாள் |
| 18 | 2 | செவ் | ஏகா46-13 | பூரா30-37 | சி30-37ம | விஜய ஏகாதசி, மாடுவாங்க |
| 19 | 3 | புதன் | து40-11 | உத்26-25 | அ26-25சி | கிருகப்பிரவேசம் |
| 20 | 4 | வியா | திர34-12 | திரு22-13 | சித்60 | மாச சிவராத்திரி |
| 21 | 5 | வெள் | சது28-49 | அவி18-35 | சித்60 | போதாயன அமாவாசை |
| 22 | 6 | சனி | அ●24-2 | சத15-1 | அ15-1மா | சர்வத்திர அமாவாசை |
| 23 | 7 | ஞா | பிர19-47 | பூர13-13 | சி13-13அ | சந்திர தரிசனம் |
| 24 | 8 | திங் | துதி16-49 | உட்11-25 | சித்60 | சத்தியபோத தீர்த்தம் |
| 25 | 9 | செ | திரு15-1 | ரே10-48 | சித்60 | மாச சதுர்த்தி |
| 26 | 10 | புத | சது14-23 | அசு11-25 | ம11-25சி | ஸ்ரீ கோவிந்தப் பெருமான் |
| 27 | 11 | வியா | பஞ்14-25 | ப✻13-11 | சி13-11ம | கார்த்திக விரதம், சஷ்டி |
| 28 | 12 | வெ | சஷ்16-11 | கிரு16 19 | சி16-49ம | சத்யவிரத தீர்த்தம்[விரதம் |
| 29 | 13 | சனி | சப்19-13 | ரோ-12-1 | அ12-1சி | விதை விதைக்க |

| | | | |
|---|---|---|---|
| | | சனி | குரு |
| கே<br>ஞா-சு | 11-மீன-சுக்<br>22-மகர-ஞங் | | |
| புத | 15-கும்ப-புத | | ராகு |
| அங் | | | |

EDITED, PRINTED & PUBLISHED BY N. MUNISAWMY MUDALIAR,
AT THE "ANANDA BODHINI" PRESS,
No. 6, LAWYER CHINNATHAMBI MUDALI STREET, MADRAS.

# ஆனந்தபோதினி

# பாவ ஸ்புட கணனம்

## ஜோதிடர்களுக்கு உற்ற தோழன்.

12 பாவங்களையும் எளிதில் ஸ்புடம் பண்ணி ஜாதகங்களைக் கணிப்பதற்கும், பல பாவ நிர்ணயங்களுக்கு முக்கியமாக வேண்டிய எல்லா விவரங்களையும் அறிவதற்கும் இது பேருதவியாக இருக்கும். ஜோதிட சாஸ்திரத்தில் சாதாரண ஞானமுடையவர்களுங் கூட, இப் புத்தகத்தின் உதவியைக் கொண்டு எளிதாகக் கணனங்களைச் செய்துகொள்ளலாம்.

**இதன் விலை ஒன்றரை ரூபாய்தான்.**

---

சிறு கதை உலகில் ஒரு பெரும் புரட்சி!

# "ஜீவா" தீட்டிய உயிரோவியம்

"உயிரோவியத்தை, நான் ஒரே மூச்சில் படித்தேன் என்றால், அது எவ்வளவு ஸ்வாரஸ்யமாகவும் இனிப்பாகவும் இருக்கவேண்டும் என்று நான் சொல்லவும் வேண்டுமா?

தூய்மை என்று அசடு தட்டாமலும் கவர்ச்சி என்று சிற்றின்ப மயமாக்காமலும் காதலை எழுத்துச் சித்திரத்தில் வரைவது மிகவும் கடினமான வேலையாகும். இந்த அபூர்வமான வேலையை "ஜீவா" கலையழகு வாய்ந்த எழுத்துத் திறனுடன் செய்து முடித்திருக்கிறார் என்பது என் கருத்து.

உயிரோவியத்தை உடனே படியுங்கள் என்று நான் சிபாரிசு செய்கிறேன்" என்று "நவயுகம்" ஆசிரியர்-ஸ்ரீ. வ. ரா. இக்கதைக்கு எழுதிய முகவுரையில் எழுதியிருக்கிறார்.

**இதன் விலை அணா 12. (தபாற் செலவு அணா 5.)**

---

## ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சருடைய

# சரித்திரமும், உபதேசங்களும்.

(ஸ்ரீ ராமகிருஷ்ணர், அவர் மனைவியாராகிய சாரதாமணி தேவியார் ஸ்ரீ விவேகானந்தர் ஆகிய மூவரின் உருவப்படங்களோடு கூடியது; உயர்ந்த கிளேஸ் கடிதத்தில் அச்சிடப்பட்டது.)

சாரதாமணி தேவியார் சரித்திரமும் சேர்க்கப்பட்டது. உயர்ந்த சீமை காலிகோ பைண்டுள்ளது.

**இதன் விலை ரூ. 1—12—0.**

---

**ஆனந்தபோதினி ஆபீஸ், தபால் பெட்டி நெ. 167, மதராஸ்.**

# புத்திர சந்தான எண்ணெய்



ஆண்மலடு சொன்னாலும் சொல்லலாகும்
அப்பனே பெண்மலடு யாருமில்லை
என்மலடாய்ப் போவதென்று கேட்பாயாகில்
இயம்புவேன் கருக்குழியில் சோரிசேர்ந்தால்
வைன்மிகுந்தால் புழுதரித்தால் உதிரங்கெட்டா
ஓங்கார பிரணவத்தில் வாயு சேர்ந்தால் [ல்
தான்மதத்து விபரீதச் சேர்க்கை செய்தால்
தலையாட்டுப் பேய்பிணியால் தரியாதென்னே

ஸ்திரீகளின் கருக்குழியினிடத்தில் புழுக்கள் உண்டாகி அவ்வப்போது வித்தைப் புசித்துவிடுவதனாலும், விபரீதச் சேர்க்கையாலும், கருக்குழியினிடத்தில் சதை வளர்ந்து சோரி பற்றி இரத்தங் கட்டியிருப்பதாலும், கருக்குழி மதத்துக் கொழுத்திருப்பதாலும், மூலச் சுழியில் வாயு பித்தம் தங்கியிருப்பதனாலும் கருதரிக்காது.

இந்த எண்ணெயைக் காலை மாலை இருவேளையும் 1 அல்லது 2 காசு அளவு உள்ளங்கையில் விட்டுச் சாப்பிடவேண்டியது. இப்படி 15-நாள் சாப்பிட்டால் இது கருக்குழியிலிருக்கும் ஷை குற்றங்களை நீக்கி, கருக்குழியைச் சுத்தப்படுத்தி, மறு மாதத்திலேயே கரு தரிக்கும்படி செய்யும். இது அனுபவமான எண்ணெய். இதற்குக் கடுமையான பத்தியம் கிடையாது.

சிலருக்கு கருதரித்து 2, 3, 4-மாதங்கள் வரையில் தங்கியிருந்து திடீரென்று உடைந்துபோவதுண்டு. இவ்வகைத் தோஷமும் இந்த எண்ணெயில் நிவர்த்தியாகித் தீர்க்காயுளான கரு தரிக்கும். இதன் விலை ரூபா 2.



# சீதபேதி (டிசென்டரி) பவுடர்

இரத்தபேதி, சீதபேதி, சீதமும் இரத்தமும் கலந்த பேதி, மலத்துடன் இரத்தம் வருதல், மூலக் கடுப்பு அடிவயிற்று நோய் முதலான வியாதிகள் குழந்தைகள் முதல் பெரியோர் வரையில் யாருக்கிருந்தாலும் 4-வேளையில் இது அவற்றைத் தப்பாமல் தடுக்கும்.

ஒரு புட்டியின் விலை அணா 8.

# குழந்தை கக்கிருமல் நிவாரணி

இம்மருந்து கக்குவானால் கஷ்டப்படும் பிள்ளைகளுக்கு ஓர் ரக்ஷிணி. இது வெகு நேர்த்தியாகவும், சுகமாகவும், குழந்தைகள் சாப்பிடுவதற்கு இனிப்பாக இருக்கும். இரண்டு மூன்று நாட்களில் கக்கிருமல் நேரம் பொறுத்து கொஞ்சம் கொஞ்சமாக வந்து சில நாளைக்குள் பூர்த்தியாக குணத்தைத் தரும். இதை உபயோகிக்கும் விதம் மருந்துடன் அனுப்பப்படும்.

புட்டி 1-க்கு விலை ரூபா 1—4—0. தபாற்செலவு பிரத்தியேகம்.

---

தனலட்சுமி கம்பெனி, 6, லாயர் சின்னதம்பி முதலி தெரு, மதராஸ்

# மதன கோலாகல தங்கமாத்திரை

இம்மருந்து தாதுபுஷ்டியைத் தருவதில் நிகரற்றது. இதில் கஞ்சா, அபின் முதலிய லாகிரி வஸ்துக்கள் சிறிதும் சேர்க்கப்படவில்லை. வயது முதிர்ந்த காரணத்தாலும், உலக இச்சை இல்லாதவர்களும் இழந்த பலத்தை இம்மருந்து ஆச்சரியப்படத்தக்க விதமாய் உண்டாக்கி ஒருவிதமான சுறுசுறுப்பையும் கொடுக்கும். இதுவன்றி வேறு எந்த நோயினாலுண்டான பலவீனமும் இம்மருந்தினால் நீங்கும். இரத்த விருத்தியையுண்டாக்கி நரம்புகளுக்கு உறுதியைக் கொடுக்கும் தன்மையில் இது கைகண்ட மருந்து. வயோதிகமே தெரியாது. களைப்பும் தோன்றாது. சோர்வையும் சோம்பலையும் நீக்கித் தேக பலத்தைக் கொடுக்கும்.



இது, தங்கம், வெள்ளி, முத்து, அயம், காந்தம் முதலிய உயர்ந்த உலோகச் சரக்குகளும், சஞ்சீவிக்கு நிகரான பல மூலிகைகளும் சேர்க்கப்பட்டு சிறந்த கைபாக செய்பாகங்களாய் தயாரிக்கப்பட்டது.

இதனை ஒருமுறை வாங்கி உபயோகித்தால் இதன் மேலான குணம் தானே தெரியும். 20-மாத்திரைகொண்ட சீசா 1-க்கு விலை ரூபா 2.

# சர்வபடை சம்மாரன்



சரீரத்தின் இடுக்கான இடங்களாகிய துடையின் இடுக்கு, அக்குள், இடுப்பு முதலிய இடங்களில் சிறிது சிறிதாகப் படர்ந்து இரவில் ஓயாத நமைச்சலைத் தந்து நித்திரையைப் பங்கப்படுத்திச் சரீரத்துக்கு அதிக கஷ்டத்தை உண்டுபண்ணும் படைகள், ஒரே தடவையில் இந்தச் சர்வபடை சம்மாரன் என்னும் தைலத்தை உபயோகித்த மாத்திரத்தில் சூரியனைக் கண்ட பனிபோல் நீங்கும். புட்டி 1-க்கு விலை அணா 4. தபாற்கூலி வேறு.

# கண்நோய் மருந்து



இது கண்நோய், கண்குத்தல், கூசல், நீர் வடிதல், மங்கல், அந்திமாலை, பீளை கட்டல், சதை வளர்ந்திருத்தல், கண் சிவப்பு, எரிச்சல், கண் இமை புருவம் இணைகளில் வலி, கண் புகைச்சல் இவைகளைக் குணப்படுத்தும். மாணுக்கர்களுக்கும் ஆழ்ந்த பார்வையோடு வேலை செய்பவர்களுக்கும் இது மிகச்சிறந்த ஒளஷதம். இதை உபயோகிப்பவர் கண்ணாடி போடவேண்டியதில்லை.

புட்டி 1-க்கு அணா 8. தபாற்கூலி வேறு.

---

தனலட்சுமி கம்பெனி, நெ. 6, லாயர் சின்னதம்பி முதலி தெரு, மதராஸ்

# சர்வமேக நிவாரணத் தைலம்




இந்தப் பிரசித்திபெற்ற இராஜ சஞ்சீவி திராவகத்தை, காலை மாலை இரண்டு வேளை களிலும் 10-நாட்கள் வரை உட்கொண்டால் வெகு நாட்களாகத் தேகத்தில் ஊரிய மேக ரோகங்கள், மேக வாய்வு, தனுர்வாதம், முழங் கால் வாதம், குறிகால் வாதம், சகலமான தடிப்புகள், மேகரோகத்தால் உண்டான வெடிப்பு இரணங்கள், குழிப் புண்கள், புரை யோடுகிற புண்கள், திமிர் வாய்வு, கைகால் விரல்களில் மேகநீர் தங்கிய நோய்கள், கிரந்தி முதலிய கிரந்திப் புண்கள், துடைவாழை படைகள், நகக்கணுநோய், சகல மூலங்கள் முதலிய ரோகங்கள், நெருப்பிலிட்ட பஞ்சு போல் போகும். இது அநேக ஜனங்களின் துன்பத்தை நீக்கிச் சௌக்கியத்தை உண்டு பண்ணி அதிக அனுபவத்திற்கு வந்தது. கடின பத்தியமின்றி, பால், நெய், கறி முத லியவைகளுடன் சாப்பிடக்கூடியதும், சீனி, இளைப்பு, ஆயாசம் முதலியவைகளை உண்பாக் காமல் சுகமாக்கி வியாதிகளைக் கண்டித்துச் சுகப்படுத்தக்கூடியதுமடங்கி உண்மையான மருந்து. இதன் விலை ரூபா 1—8—0. தபாற்கூலி வேறு.

மேகரோக நிவாரணி!
தாது விருத்திக்கு நிகரற்றது!!

# எலிக்ஸைரன்

மலையாள அஷ்டாங்க முறைப்படி மலையாளத்தில் தயார் செய்தது.

பத்தியம் கிடையாது. ருசிகரமானது. இரத்த சுத்திக்கும் இரத்த விருத்திக்கும், தசை விருத்திக்கும், தாது பலத்திற்கும் இது ஒரு அமிர்த சஞ்சீவியாகும். நாள்பட்ட வெள்ளை, வெட்டை, மேகவியாதி, நீர்கீர், மூலச்சூடு, நரம்புத் தளர்ச்சி, வீரியக் குறைவு, லிங்கப் புண், லிங்கப் புற்று, மேகப் படைகள், உடம்பு ஊரல், அஜீரணம், மலச்சிக்கல். கைகால் நோவு, மயக்கம், இடுப்பு வலி, மூத்திரநோய் முதலிய எல்லாவிதமான மேக வியா திகளைப் போக்கி, புத்துயிர் அளித்து இல்லற இன்பத்தை அனுபவிக்கச் செய்து, யௌவனத்தைத் தரும்.



இம்மருந்து வெகு பிரயாசையின்பேரில் அதிகப் பணச் செலவினாலும், அநேகவிதமான மலையாள மூலிகை உலோக வஸ்துக்களைக் கொண்டும் முறைப்படி தயார் செய்தது.

இம் மருந்தை யுட்கொண்டு, தங்கள் தேகத்தில் உள்ள வியாதியை அகற்றுங்கள். உண்மை விளங்கும். ஆண் பெண் யாவரும் சாப்பிடலாம்.

20-நாள் மருந்து 40 வேளைக்கு உபயோகிக்கக் கூடியது. பூரண குணத்துக்குப் போதுமானது. விலை ரூ. 2—4—0.

---

**தனலட்சுமி கம்பெனி நெ. 6, லாயர் சின்னதம்பி முதலி தெரு, மதராஸ்**

# சர்வதேள் விஷ சஞ்சீவினி

(ரிஜிஸ்டர் டிரேட் மார்க்)

**பட்டவுடனே விஷம் பறக்கும்! அழுதவன் சிரிப்பான்!!**

**இதில் குணமில்லையென்று நிரூபிப்பவர்களுக்கு 100-ரூபாய் இனாம்.**




நமது நாட்டிற்கு இது அவசியமாய் ஒவ்வொரு குடும்பத்திலும் சதா கையிருப்பாய் இருக்கவேண்டிய ஓர் ஔஷதமாகும். இது ஆங்கில யூனானி தமிழ் வைத்திய நிபுணர்களால் நன்கு மதிக்கப்பட்டுள்ளது. இதை நாள்பட வைத்திருப்பதால் இதன்குணம் சற்றும் குறையாது. தேள், நட்டுவாய்க்காலி, செய்யான், பாம்பு, எலி முதலியவற்றின் விஷங்களை இரண்டொரு நிமிஷங்களில் இது அடியோடு நீக்கக்கூடியது. எண்ணிறந்தோர் இதனால் சுகமடைந்திருப்பது பிரத்தியக்ஷ அனுபவமானதால் இதைப்பற்றி நாம் அதிகம் கூறவேண்டியதில்லை. இது இரண்டுவித மருந்துகள் அடங்கியது. இதை உபயோகிக்கும் முறை மருந்தோடு அனுப்பப்படும். விலை:—இரண்டுவித மருந்தும் அடங்கிய பாக்கெட் 1-க்கு அணா 8. தபாற் கூலி அணா 4. டஜன் 1-க்கு விலை ரூபா 5.

ஏககாலத்தில் 3-பாக்கெட் வாங்குவோருக்குத் தபாற்கூலி இனாம், வியாபாரிகளுக்கு 100-க்கு 25 கமிஷன் கொடுக்கப்படும்.

# மேஹ ராஜ சஞ்சீவி எண்ணெய்



இந்த எண்ணெயை ஒருமுறை மூன்றுநாள் சாப்பிட்ட மாத்திரத்திலேயே, கிரந்தி, மேக தாமரை, மேக நமைச்சல், மேக இரணம், மேகப் புண், கால் கைகளிலே சேரும் மேக துர்நீர், மேக வெடிப்பு, எல்லாவகைகளான வெள்ளை, மூத்திரக் கருவியிலே தோன்றும் பலவித வியாதிகள் தீரும். அநேக காலமாக இருக்கும் வியாதிகளுக்கு ஒருமுறை சாப்பிட்டு, 15 நாள் பொறுத்து, மற்றொரு முறை சாப்பிடவேண்டும்.

3-நாள் எண்ணெய், புட்டி 1-க்கு ரூபா 1—8—0; மருந்து ஆர்டர் செய்யும்போது வியாதியின் பூரண நிலவரத்தை தெரியப்படுத்தவும்.

# சுகபேதி மாத்திரை

இந்த மாத்திரையில் 2-முதல் 5-வரை தேகதிடமறிந்து மாத்திரையைச் சாப்பிட்டு கொஞ்சம் ஜலம் சாப்பிடவும். இவ்விதம் சாப்பிட்டால் சுகமாய் பேதியாகிவிடும். மாத்திரையை அனுப்பும்பொழுது உபயோகிக்கும் முறை தெரிந்துகொள்ளலாம்.

25-மாத்திரை அடங்கிய புட்டி 1-க்கு விலை அணா 6.

---

**தனலட்சுமி கம்பெனி, 6, லாயர் சின்னதம்பி முதலி தெரு, மதராஸ்**

# கார்ப் கியூர் என்னும் க்ஷய அரி



கப இருமல், இரைப்பு அல்லது மந்தகாசம், க்ஷயம், சளி இருமல், கக்குவாய் இருமல், பெருத்த இருமல், தொண்டை நோய், சுவாசகாசம், கடினமான ஜலதோஷம், அபாயமான ஈழை இருமல், தொண்டை யெரிச்சல், தொண்டைக் காகரப்பு, இருமலினால் தூக்கம் பிடியாமை, குளிர்ச்சியான வஸ்துவைச் சாப்பிடுகிறதினாலும் பனியில் நனைவதினாலும் உண்டாகும் சாதாரண இருமல் முதலான வியாதிகளை நாலு தினத்தில் இது கண்டித்துக் கோழையை வெளியில் தள்ளி நன்றாய் அவ்வியாதி கொண்டிருந்தவரை தூங்கச் செய்யும். புட்டி 1-க்கு விலை ரூபா 1.

## ஜி. கியூர்

### இது 3-தினத்தில் குணப்படுத்தும்

மேக உஷ்ணத்தால் தாது கெட மூலத்தில் அக்னி அதிகரிப்பதனால் ஏற்படும் கள்ளநோய். நீரடைப்பு, சதையடைப்பு, பவுத்திரம், அரையாப்பு முதலியன இந்த நோயின் மூலமாய் ஏற்படும். நீர்க்கடுப்பும், குத்தலும், எரிச்சலும் காண்பதுண்டு. இவைகளை சீக்கி நல்ல சுகத்தைக் கொடுக்கக்கூடிய அநுபவ மருந்து இது. பத்தியம் கிடையாது. இதனை உபயோகிக்கும் விவரம் மருந்துடன் அனுப்பப்படும்.

புட்டி 1-க்கு விலை ரூபா 1. தபாற்கூலி வேறு.

## மயிர் போக்கும் சோப்



இது ஒவ்வொருவருக்கும் மிகவும் அத்தியாவசியமானது. சரீரத்தின் எந்தப் பாகத்திலுமுள்ள மயிரை இந்த சோப்பின் உதவியால் பிரயாசையின்றி வெகு சுலபமாய் போக்கிவிடலாம். மயிரைப் போக்கவேண்டிய இடத்தில் கொஞ்சம் ஜலத்தைப் பூசி, அதன்மேல் இந்த சோப்பைத் தேய்த்து ஐந்து நிமிஷம் கழித்து காகித கார்டினாலாவது, ஓலைத் துண்டினாலாவது வழித்தால் அவ்விடத்திலுள்ள மயிர் யாவும் கழிந்து போகும். அந்த இடம் பிறகு மழமழப்பாக விருக்கும். இந்த சோப்பில் துர்நாற்றம் முதலியனை

இரா. 3-சோப் கொண்ட பாக் 1-க்கு விலை ரூ. 1 0 0.

## மயிர் போக்கும் சூரணம்

இந்த சூரணத்தை ஜலத்தில் கலந்து, மயிர் போக்கவேண்டிய யிடத்தில் தடவி உலர்ந்த பின் உடனே 5-நிமிஷம் பொறுத்து கழுவினால் மயிர் போய்விடும். புட்டி 1-க்கு விலை அணா 8.

---

தனலட்சுமி கம்பெனி, நெ. 6, லாயர் சின்னதம்பி முதலி தெரு, மதராஸ்

# நூதன தமிழ் நாவல்களும் கதைப் புத்தகங்களும்.

**ஆரணி-குப்புசாமி முதலியார் இயற்றியவை.**

| | ரூ. | அ. |
|---|---|---|
| ஞானசெல்வாம்பாள் 5பாகம் | 9 | 10 |
| கற்பகச் சோலையின் அற்புதக் கொலை ... | 1 | 4 |
| கடற்கொள்ளைக்காரன்2பாகம் | 3 | 4 |
| மதனாம்பாள் 2-பாகம் ... | 3 | 0 |
| லோகசாயகி ... | 1 | 0 |
| விளையாட்டுச் சாமான் ... | 1 | 6 |
| பவளத்தீவு 2-பாகங்கள் ... | 3 | 0 |
| தபால்கொள்ளைக்காரர்கள் ... | 0 | 14 |
| அமராவதி 2-பாகங்கள் ... | 4 | 0 |
| மஞ்சள் அறையின் மர்மம் ... | 1 | 8 |
| கற்கோட்டை ... | 2 | 0 |
| பூங்கோதை ... | 0 | 10 |
| வீரநாதன் ... | 0 | 12 |
| கனகபூஷணம் 2-பாகமும் ... | 3 | 8 |
| கமலசேகரன் ... | 1 | 12 |
| தினகரசுந்தரி ... | 1 | 0 |
| ரத்தினபுரிரகசியம் 9பாகமும் | 18 | 2 |
| சந்திராபாய் ... | 2 | 0 |
| இராஜாமணி ... | 2 | 0 |
| இரத்தினபாய் ... | 1 | 12 |
| மதனபூஷணம் ... | 1 | 0 |
| சுவர்ணாம்பாள் ... | 0 | 12 |
| தேவசுந்தரி ... | 1 | 4 |
| குணசுந்தரன் ... | 0 | 12 |
| பத்மாவனி ... | 0 | 14 |
| ஆனந்தவல்லி ... | 2 | 0 |
| மின்சார மாயவன் ... | 1 | 8 |
| ஆனந்தசிங்கின் அஷ்டஜயங்கள் | 1 | 12 |
| அரசூர் இலக்ஷ்மணன் ... | 2 | 0 |
| கைவல்லிய நவநீத வசனம் ... | 1 | 8 |
| சகோதரவாஞ்சை ... | 0 | 7 |

---

| | ரூ. | அ. |
|---|---|---|
| [illegible]மாயணம் ... | 4 | 0 |
| ஸ்ரீ ராமகிருஷ்ண [illegible]மஹம்சருடைய சரித்திரமும் உ[illegible]ங்களும் | 1 | 12 |
| விவேகானந்தர் ... | 4 | 0 |
| தமிழ் மெடீரியா [illegible] ... | 3 | 0 |
| மாதவி மாதவன் [illegible]கம் ... | 2 | 0 |
| [illegible] ... | 1 | 0 |
| [illegible]மபை ... | 1 | 0 |
| [illegible] விகட விலாச விநோதம் | 0 | 10 |
| மோட்டி கார்த்தியாயினி ... | 0 | 12 |

| | ரூ. | அ. |
|---|---|---|
| துயராளன் கதை ... | 0 | 12 |
| பூலோக லக்ஷ்மி கதை ... | 0 | 10 |
| கனகரத்தினம் ... | 0 | 8 |
| கண்டிராஜா நாடகம் ... | 0 | 12 |
| நளின சுந்தரி ... | 0 | 10 |
| கம்பராமாயண வசனசங்கிரகம் | 2 | 0 |
| குசேலோபாக்கியான வசனம் | 1 | 0 |
| ஸ்ரீபாலன் ... | 0 | 8 |
| உதயணன் ... | 0 | 7 |
| தசக்கிரீவன் ... | 0 | 14 |
| போஜ சரித்திரம் ... | 0 | 5 |
| சதானந்தர் ... | 1 | 4 |
| ஜீவகன் வசனம் ... | 1 | 0 |
| கர்ணன் சரிதை ... | 0 | 12 |
| பீஷ்ம விஜயம் ... | 0 | 10 |
| கீர்த்திசிங்கன் ... | 0 | 8 |
| மூப்பெருந்தாசர் ... | 0 | 10 |
| அரிச்சந்திரன் சரிதை ... | 0 | 8 |
| நீலக்கொடி ... | 0 | 5 |
| மணவாளன் ... | 0 | 8 |
| பரசுராமன் ... | 0 | 8 |
| சிசுபாலன் ... | 0 | 8 |
| அங்கதன் ... | 0 | 4 |
| தசாவதாரம் ... | 0 | 6 |
| கிருஷ்ணன் தூது வசனம் ... | 0 | 8 |
| சண்டோபாக்யானம் ... | 0 | 6 |
| கருணைகரும் சத்தியசீலரும் | 0 | 8 |
| சத்தியவசனி | 0 | 4 |
| விமலன் ... | 0 | 4 |
| கண்ணபிரான் ... | 0 | 4 |
| செய்யுட்பாடத்திரட்டு ... | 0 | 4 |
| நாலுமந்திரி கதை ... | 0 | 4 |
| மங்களேசுவரன் ... | 0 | 6 |
| தக்கன் ... | 0 | 6 |
| சீமந்தனி ... | 0 | 8 |
| நான்குகோடி ... | 0 | 4 |
| மதிமோசவிளக்கம் ... | 1 | 0 |
| மெய்க்காதவி ... | 0 | 8 |
| மேனமினுக்கி கதை ... | 0 | 8 |
| வீணைகானன் ஞானநேத்திரி ... | 0 | 8 |
| மஹேந்திரமணி கதை ... | 0 | 8 |
| கோமளவல்லி கதை ... | 0 | 8 |
| விகடவல்லி கதை ... | 0 | 6 |
| தாலிகட்ட மறந்த கதை ... | 0 | 5 |

**ஆனந்தபோதினி ஆபீஸ், தபால் பெட்டி நெ. 167, மதராஸ்.**

ஆனந்தபோதினி Regd. No. M: 1199.

# "பிரசண்ட விகடன்"

## மாதம் இருமுறை வெளிவரும் ஒரு ஹாஸ்யப் பத்திரிகை.



இதில் சிறப்பாக அரசியல், சமூக இயல், சமயவியல் சம்பந்தமான எல்லா விஷயங்களும் விலாப் புடைக்கச் சிரிக்கச் செய்யும் தோரணையில் தமாஷாகவும், வேடிக்கையாகவும், விநோதமாகவும், கேலியாகவும் வெளிவரும். ஏராளமான அபூர்வ அதி விசித்திரப் படங்கள் பத்திரிகையை அலங்கரித்து வரும். தேச சமூக விடுதலைக்கு உழைப்பது. இன்றே சந்தாதாரராகச் சேர முந்துங்கள்.

ஆண்டுச் சந்தா தபால் கூலி உட்பட உள் நாடு ரூ. 2—0—0.
வெளி நாடு ரூ. 3—0—0.
தனிப்பிரதி விலை அணா 1½.

குறிப்பு:—ஏஜண்டுகளாக விரும்புவோர் மத்ய காரியாலயத்திற்கு எழுதி விவரம் தெரிந்துகொள்ளலாம்.

ரயில்வே ஸ்டேஷன்களிலுள்ள ஹிக்கின்பாதம் புஸ்தகசாலைகளிலும் "சுதேசமித்திரன்" புஸ்தக சாலைகளிலும், எல்லா ஊர்களிலுமுள்ள ஏஜண்டுகளிடமும் "பிரசண்ட விகடன்" 1½ அணாவுக்கு விற்கப்படும்.

ஏஜண்டுகள் இல்லாத ஊருக்கு ஏஜண்டுகள் தேவை.

மானேஜர், "பிரசண்ட விகடன்" ஆபீஸ்.
நெ. 6, லாயர் சின்னதம்பி முதலி தெரு, மதராஸ்.